உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி கக.] துர்மதி-௵ புரட்டாசி-மீ [பகுதி கக.

Vol. XIX. September—October—1921. No. 11.

## மதுரைத் தமிழ்ச்சங்கத்தின்

## இருபதாம் வருடக்கொண்டாட்டம்.

இவ்வாண்டு செப்டம்பர்மீ 17,18உகளில் மதுரைத்தமிழ்ச்சங்கத்தி னிருபதாம்வருடக்கொண்டாட்டம் இவ்வூரில் ஸேதுபதி உயர்தரகலாசாலைக் கட்டடத்தில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதற்குத் தமிழ்ச்சங்கத்தின் சாசுவத அக்கிராஸனாதிபதியும் இராமநாதபுரம் ஸமஸ்தானாதிபதியுமான மாட்சிமைதங்கிய கனம் B. இராஜாராஜேஸ்வரஸேதுபதி மன்னரவர்கள், சென்னை எக்ஸிகூட்டிவ்கௌன்ஸில் மெம்பரும் ஸர்வகலாசங்கத்தின் உபாக்கிராசனாதிபதியுமான கனம் K. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள், மஹாமஹோபாத்தியாய உ.வே. சாமிநாதையரவர்கள், திருநெல்வேலி தாலூகாபோர்டு பிரஸிடெண்டு மகா-ா-ா-ஸ்ரீ V. P. சுப்பிரமணிய முதலியாரவர்கள், மதுரை பாரிஸ்டர் மகா-ா-ா-ஸ்ரீ P. T. ராஜன் அவர்கள், ஸேதுஸம்ஸ்தான வித்வான் ஸ்ரீமத். ரா. இராகவையங்காரவர்கள், மதுரை ஹைக்கோர்ட்டுவக்கீல் ஸ்ரீமத். K. ராமையங்காரவர்கள், ஸ்ரீமத். T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள், ஸ்ரீமத். M. மாணிக்கவாசகம் பிள்ளையவர்கள், ஸ்ரீமத். T. N. சுந்தரராஜையங்காரவர்கள், ஸ்ரீமத். V. S. இராமஸ்வாமி சாஸ்திரிகள், ஸ்ரீமத். ராவ்பஹதூர் P. சுப்பராயஐயரவர்கள், ஸ்ரீமத். L. K. துளசிராம் அவர்கள், ஸ்ரீமத். V. சுந்தரமையரவர்கள், ஸ்ரீமத். K. வெங்கோபராவ் அவர்கள், ஸ்ரீமத். C. ஸ்ரீநிவாஸராவ் ஸாஹெப் அவர்கள், ஸ்ரீமத். R. S. நாராயணஸாமி ஐயரவர்கள், ஸ்ரீமத்.

*

T. S. சுப்பிரமணியஐயரவர்கள், ஸ்ரீமத். R. கணபதிஐயரவர்கள், ஸ்ரீமத். N. R. கிருஷ்ணஸாமி ஐயங்காரவர்கள், பேரையூர் ஜமீந்தார் ம-ா-ா-ஸ்ரீ முத்துவிஜய ரகுநாதகொடுமுடி தம்பையசாமி தம்பிச்சநாயக்காவர்கள், சேற்றூர் ஜெமீந்தார் மகா-ா-ா-ஸ்ரீ வடமலைத் திருவநாத சேவகப்பாண்டி யத்துரைத் தேவரவர்கள், தேவகோட்டை ஜெமீந்தார் மகா-ா-ா-ஸ்ரீ A. L., A. R., அருணாசலஞ்செட்டியாரவர்கள், மதுரை Dt. Munsiff மகா-ா-ா-ஸ்ரீ பழநியப்பமுதலியாரவர்கள், மதுரைத்தாலூகாபோர்டு பிரஸிடெண்டும், சிறுபாலை ஜமீந்தாருமான மகா-ா-ா-ஸ்ரீ ப. சி. முத்து செட்டியாரவர்கள், மதுரை ஜில்லாபோர்டு உபாக்கிராசனாதிபதி ஸ்ரீமத். அப்பாய்நாயுடு அவர்கள், மகா-ா-ா-ஸ்ரீ N. சுந்தரலிங்கஸாமி காமயநாயக்க ரவர்கள், மதுரைப்போஸ்டுமாஸ்டர் ஸ்ரீமத். விஜயராகவாசாரியரவர்கள், Postal Superintendant மகா-ா-ா-ஸ்ரீ மாரிமுத்துப்பிள்ளையவர்கள், மதுரை Police Inspector மகா-ா-ா-ஸ்ரீ அரங்கஸாமிஐயங்காரவர்கள், வித்யாநிதி ர. கிருஷ்ணமாசாரியர் M. A. அவர்கள், ஸ்ரீமத். M. S. பூர்ணலிங்கம்பிள்ளை M. A. அவர்கள், ஸ்ரீமத். V. முத்துஸாமிஐயர் M. A. L. T. அவர்கள், செந்தமிழ்ப்பத்திராதிபர் ஸ்ரீமத். திரு. நாராயணையங்கா ரவர்கள், மதுரைத் தமிழ்ச்சங்கத்து நூற்பரிசோதகர் ஸ்ரீமத். சே. ரா. சுப்பிரமணியக்கவிராயரவர்கள், ஸ்ரீமத். காஞ்சி நாகலிங்கமுதலியாரவர் கள், இராமநாதபுரம் வக்கீல் ஸ்ரீமத். T. இராமாநுஜையங்காரவர்கள், ஸ்ரீமத். A. உக்கிரபாண்டியம்பிள்ளையவர்கள், சென்னை ஸ்ரீமத். K. சதா சிவ செட்டியார் B.A. அவர்கள், திருநெல்வேலி ஹிந்துகலாசாலைத் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமத். த. மு. சொர்ணம்பிள்ளையவர்கள், வானமாமலை யாதீன வித்வான் ஸ்ரீமத். பக்ஷிவானமாமலைஐயங்கார்ஸ்வாமிகள், திருவையாற்று ஸம்ஸ்கிருதகலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். சந்தானமையங்காரவர் கள், திருச்சி ஸ்ரீமத். S. ராஜகோபாலாசாரியரவர்கள், கும்பகோணம் ராஜாங்கக்கலாசாலை யுபாத்தியாயர் ஸ்ரீமத். K. C. வீரராகவையரவர்கள், மதுரை அமெரிக்கன் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். ஆ. கார்மேகக் கோனாரவர்கள், மதுரை ஸௌராஷ்டிர கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். P. C. புன்னைவனநாதமுதலியாரவர்கள், ஆம்பூர் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். P. M. வேணுகோபாலநாயுடு அவர்கள், ஸ்ரீமத். T. சுதர்சனாசாரியரவர்கள், மதுரை ஸ்ரீமத். R. நாகேஸ்வரஐயரவர்கள், மதுரை Y. M. C. A. சங்கக்காரியதரிசி ஸ்ரீமத். துரைஸாமிபிள்ளை யவர்கள் முதலியோர் விஜயஞ்செய்திருந்தனர்.

## தமிழ்ச்சங்கத்தின் 20-ம்வருடக்கொண்டாட்டம் ௲௬

17உ மாலை 4-மணிக்கு ஸபை கூடியது. முதலில் வருஷக்கொண் டாட்டத்துக்கு அக்கிராஸனராகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற சென்னை எக்ஸிகூடிவ்கௌன்ஸில்மெம்பரும் ஸர்வகலாசங்கத்தின்உபாக்கிராசனாதி பதியுமான கனம் K. ஸ்ரீநிவாஸையங்காரவர்களை வாத்தியகோஷத் துடன் சங்கத்தார் வரவேற்றுபசரித்தனர். அப்பொழுது மதுரை ஸேது பதி உயர்தரகலாசாலை மாணவர்கள் பட்டாளத்தாரைப்போல் உடை யணிந்து அணிவகுத்துநின்று மரியாதைசெய்தார்கள். பின்னர் திரு வையாற்று ஸம்ஸ்கிருத கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத்—சந்தான மையங்காரவர்கள் கடவுள்வாழ்த்துப்பாடினார்கள். தமிழ்ச்சங்கக்கலாசாலை யுபாத்தியாயர் ஸ்ரீமத். நல்லசிவன்பிள்ளையவர்களியற்றிய மங்களவாழ்த் துச் செய்யுட்கள் ஷை கலாசாலை யுபாத்தியாயர் ஸ்ரீமத். ஹரிஹரைய ரவர்களாற் படிக்கப்பட்டன. அதன்பின், தமிழ்ச்சங்கத்தின் நிரந்தர அக்கிராசனரான மாட்சிமைதங்கிய ஸேதுபதிமகாராஜாவர்கள் கேட்டுக் கொண்டபடி, கனம் K. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் ஸபைத்தலைமை வகித்தார்கள். மதுரைவக்கீலும் சங்கத்தின் நிர்வாகஸபையங்கத்தினரு மான ஸ்ரீமத். K. ராமையங்காரவர்கள் அக்கிராசனருக்கு மாலைசூட்டி னார்கள். பின்னர் மாட்சிமைதங்கிய ஸேதுபதி மஹாராஜாவர்களால்,

நமது இந்தியாதேசத்துக்கு இரண்டுமாதத்துக்குள்விஜயம்செய்யும் மேன்மையும் கௌரவமும் தங்கிய இளவரசரவர்கட்கு இச்சங்கத்தார் நல்வரவுகூறுகிறார்கள்; அவர்கள் இத்தேசத்திற் சகல ஸௌக்கியத் துடனுமிருந்து இத்தேசத்தவரின் ராஜவிசுவாசத்தையும் அன்பையும் நமது அதிமேன்மைதங்கிய சக்கரவர்த்தியவர்கட்குத் தெரிவிக்கவும் இச்சங்கத்தார் வேண்டுகிறார்கள்.

என்கிற தீர்மானம் பிரேரேபிக்கப்பட்டுச் சபையோரால் ஏகமனதாய் அங்கீகரிக்கப்பட்டது.

பின்னர், சங்கத்தின் கௌரவகாரியதரிசி ஸ்ரீமத் T. C. ஸ்ரீநிவா ஸையங்காரவர்கள், வருடக்கொண்டாட்டத்துக்குவரமுடியாத அங்கத் தினரிடமிருந்தும் அபிமானிகளிடமிருந்தும் வந்த தந்திகளையும் கடிதங் களையும், தமிழ்ச்சங்கத்தின் இருபதாம் வருட அறிக்கைப்பத்திரத்தை யும் படித்தார்கள்.

அதன்பின், வந்திருந்த கனவான்களுள், ஸேதுஸமஸ்தான வித்துவான் ஸ்ரீமத்-ரா. இராகவையங்காரவர்கள் தமிழின்பெருமையை

யும் தமிழ்ச்செய்யுளின் சிறப்பையும், தமிழரசர்கள் தமிழைப் பாது காத்துவந்தமுறையையும், மதுரையின்சிறப்பையும் தக்க மேற்கோள் களால் விளக்கி, நம் சங்கம் இதுவரை தமிழைவளர்த்துவந்தது போலவே இனியும் வளர்த்துவரவேண்டுமென்றும், சங்கக் கலாசாலையிற் பயிலும் மாணவர்க்கு வடமொழியையும் இசையையும் அவசியம் உப பாடமாயமைக்கவேண்டுமென்றும், பல புதுநூல்களைத் தேடி எழுதிப் பிரசுரஞ்செய்யவேண்டுமென்றும் அபிப்பிராயங்கூறினார்கள்.

ஸ்ரீமத். V. P. சுப்பிரமணியமுதலியாரவர்கள், சங்கம் ஆராய்ச்சி (Research work) முறையில் வேலைசெய்யவேண்டுமென்று அபிப்பிரா யங் கூறினார்கள்.

மதுரைப் போஸ்ட்மாஸ்டர் ஸ்ரீமத்-விஜயராகவாசாரியரவர்கள், தமி ழுக்கும் ஸம்ஸ்கிருதத்துக்கும் வேற்றுமையில்லையென்பதையும் வைஷ் ணவர்களுக்குள் வடகலை தென்கலை என்ற பிரிவு ஏற்பட்ட காரணத் தையும் மதுரை தமிழ்வேதத்துக்கும் வடமொழிவேதத்துக்கும் இட மென்பதையும் விளக்கித் தமிழ்ச்சங்கம் பல்லாற்றானும் அபிவிர்த்தி யடையவேண்டுமென்றும் அபிப்பிராயங்கூறினார்கள்.

ஸ்ரீமத். M. S. பூர்ணலிங்கம்பிள்ளை M. A. அவர்கள், சங்கம் புதியஆராய்ச்சிமுறையில் வேலைசெய்யவேண்டுமென்றும், தமிழில் ஒருபெரிய அகராதியும் தமிழ்க்கவிசரிதமும், எழுதிவெளியிட வேண்டுமென்றும், அதற்குத் தக்கவித்வான்களுடைய உதவிவேண்டு மென்றும், தக்கவித்துவான்கள் இப்போது சிலரே யிருப்பதால் இவர் கள் காலத்திலேயே அவை வெளியிடப்படவேண்டுமென்றும் அபிப்பிரா யங் கூறினார்கள்.

அதன்மேல், கனம்பொருந்திய அக்கிராசனரவர்கள் சங்கப்பரீக்ஷை களிற்றேறிய மாணவர்க்குப் பரிசுமுதலிய அளித்துத் தமது பிரசங்கத் தைச் சுருக்கமாகவும் உருக்கமாகவும் விளக்கமாகவும் தமிழில் எழுதிப் படித்து அதையே ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துக் கூறினார்கள்.

அதன்பின், வானமாமலைபாதீனவித்துவான் ஸ்ரீமத். பக்ஷிவானமா மலை ஐயங்கார்ஸ்வாமி தாம் வடமொழியிற் செய்த மங்களவாழ்த்தைப் படித்துப் பொருள்கூறினார்கள்.

பின்னர், மதுரைவக்கீலும் சங்கத்தின்நிர்வாகசபையங்கத்தினருமான ஸ்ரீமத். V. S. இராமஸ்வாமிசாஸ்திரிகள் கனவான்கள்கூறிய அபிப்பிராயத்தைப்பற்றிப் பேசுமிடத்து, சங்கக்கலாசாலைமாணவர்க்கு வடமொழியை முன் உபபாடமாகவைத்துப் பார்த்ததில், போதுமான பயன் ஏற்படாது, தமிழபிவிர்த்தியும் தடைப்பட்டமையால் இப்போது தனித்தமிழ்மாத்திரம் கற்பிக்கப்பட்டுவருகிறதென்றும், இசையைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது அவசியமேயென்றும், இயன்றவரை புதுநூல்கள், தேடி எழுதிப் பிரசுரிக்கப்பட்டுள்ளன என்றும், ஸ்ரீமத். பூர்ணலிங்கம்பிள்ளையவர்கள் சொல்லியபடி தமிழ்ச்சொல்லகராதியில் இரண்டு பாகமும், அபிதானசிந்தாமணி யென்னும் பேரகராதியொன்றும் வெளியிடப் பட்டுள்ளனவென்றும், தமிழ்ச்சொல்லகராதியின் மூன்றாம்பாகம் விரைவில் வெளிவருமென்றும், அபிதானசிந்தாமணியிற் றமிழ்க்கவி சரிதமும் இடையிடையே சேர்க்கப்பட்டிருக்கிறதென்றும், இன்னும் அவற்றைச் செம்மைசெய்து வெளியிடஉத்தேசமுண்டென்றும், இவற்றுக்கு விசேஷ திரவியசகாயம் வேண்டுமென்றுங்கூறி அக்கிராசனர் முதலியோர்க்கு வந்தனம் செலுத்தினார்கள். அதன்பின் சங்கத்தின் கௌரவ காரியதரிசி மகா-௱-௱ஸ்ரீ M. மாணிக்கவாசகம்பிள்ளையவர்கள் அக்கிராசனர்க்கு மாலைசூட்டினார்கள். அன்று இரவு 8-மணிக்கு ஸபை இனிது நிறைவெய்தியது.

## 18௨ ஸபைநிகழ்ச்சி.

---

காலை $8\frac{1}{2}$ மணிக்கு ஸபைகூடியது. அக்கிராசனரான கனம் K. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் வேறுகாரியமாகச் சென்றிருந்தமையால் மஹாமஹோபாத்யாய உ. வே. சாமிநாதையரவர்கள் ஸபையோர்வேண்டுகோட் கிணங்கிச் சபைத்தலைமைவகித்துத் தமிழ்ச்சங்கம் இருபது வருடகாலமாய்ச் செய்துவரும் அரியவேலைகளைப் புகழ்ந்தும், சங்கக்கலாசாலையிற் பயின்ற அநேகர் ஆங்கிலகலாசாலைகளிலும் பிற இடங்களிலும் தமிழ்ப்பண்டிதராயிருப்பதைப் பாராட்டியும், செந்தமிழ்வாங்குவோர் தொகை குறைந்திருப்பதற்கிரங்கியும், இன்னும்பலர் செந்தமிழ் வாங்குவோராய்ச்சேர்ந்து ஆதரித்துவரவேண்டுமென்றும், முன்னுரை கூறினார்கள். திருவையாற்று ஸம்ஸ்கிருதகலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். சந்தானமையங்காரவர்கள் கடவுள்வாழ்த்துப்பாடினார்கள்.

பின், சங்கத்தின் கௌரவகாரியதரிசி ஸ்ரீமத் T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள், யாழ்ப்பாணத்துச் சுன்னாகம் வித்துவான் ஸ்ரீமத். அ. குமாரசுவாமிப்பிள்ளையவர்க ளனுப்பியிருந்த தமிழ்மொழிவளர்ச்சி என்ற பொருளுரையைப்படித்து, அதிற் கூறப்பட்ட விஷயங்களைப் பாராட்டி அதிற்கூறியபடி தமிழ்ச்சங்கக்கலாசாலையை இன்னும் அபிவிருத்தி செய்ய விசேஷதிரவ்யஸஹாயம் வேண்டுமென்றும், தனித்தமிழ்ப்பரீக்ஷைப் பாடவிஷயங்களைச் சங்கத்தின் வித்யாவிஷய ஆலோசனை ஸபையார் கவனித்து வேண்டியது செய்வார்களென்றும் கூறினார்கள்.

அதன்பின், திருச்சி ஸ்ரீமத். S. ராஜகோபாலாசாரியர் B.A. அவர்கள் இந்தியக்கல்விச்சங்கம் (National university) என்னும் விஷயத்தையும், மதுரை ஸௌராஷ்டிர உயர்தரகலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். P. சிதம்பரபுன்னைவனநாதமுதலியாரவர்கள் தமிழும் ஸர்வகலாசாலையும் என்னும் விஷயத்தையும், இராமநாதபுரம் ஜில்லா பெண்பாடசாலை உதவிப்பரிசோதகர் ஸ்ரீமத். V. முத்துஸாமிஐயர் M.A., L.T., அவர்கள் ஆங்கிலப்பள்ளிக்கூடத்திற் றமிழ் என்னும் விஷயத்தையும் எடுத்துக்கொண்டு பாலர்வகுப்புமுதல் எம். ஏ. பட்ட பரீக்ஷைவரை தமிழையும் முக்கியபாடமாக்கவேண்டுமென்றும் ஆங்கிலமொழிந்த பாடங்களையெல்லாம் மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றிவைக்கவேண்டுமென்றும், தமிழுக்கென்று தனியே ஒரு ஸர்வகலாசங்கம் ஏற்படவேண்டுமென்றும் பேசினார்கள்.

அதன்பின், மதுரை வக்கீல் ஸ்ரீமத். ஆர். எஸ். நாராயணஸாமி ஐயரவர்கள் பரிபாடற் பதினோராம்பாட்டிற்கண்ட கிரகநிலையைப்பற்றி ஆக்ஷேபித்துப் பேசினார்கள். அதன்பின், செந்தமிழ்ப்பத்திராதிபர் ஸ்ரீமத். திருநாராயணையங்காரவர்களும், மதுரைவக்கீல் ஸ்ரீமத். ஆர். கணபதி ஐயரவர்களும் பரிபாடற்பாட்டிற்கண்ட கிரகநிலைகள் சரியாயிருக்கலாமென்று தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்துக்கொண்டார்கள்.

பின்பு, மதுரை Y. M. C. A. சங்கக்காரியதரிசி ஸ்ரீமத். துரைசாமிபிள்ளையவர்கள், தமிழ் என்ற விஷயமாகத் தாம் எழுதிய வியாசத்தைப் படித்துத் தனித்தமிழ்ப்பரீக்ஷைகளில் ஒவ்வொரு பரீக்ஷையிலும் ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொருவருடமாகச்சென்று தேறலாமென்று விதியேற்படுத்தவேண்டுமென்றும் கூறினார்கள்.

அதன்பின், மதுரைத் தமிழ்ச்சங்கத்து நூற்பரிசோதகர் ஸ்ரீமத். சே. ரா. சுப்பிரமணியக்கவிராயரவர்கள் அரசியலாராய்ச்சி என்ற விஷயமாகத் தாமெழுதிய பொருளுரையைப் படித்து விளக்கினார்கள்.

அதன்மேல், அக்கிராசனரான மஹாமஹோபாத்தியாய ஐயரவர்கள், ஸபையிற் பேசப்பட்டனவும் படிக்கப்பட்டனவுமான விஷயங்களையும் பொருளுரைகளையும் பாராட்டி, ஆங்கிலகலாசாலைகளிற் றமிழையும் முக்கியபாடமாக்கும்விஷயமாகப் பேசப்பட்டவற்றைச் சங்கக்கொண்டாட்டத்துக்கு அக்கிராஸனராகவந்த கனம் ஐயங்காரவர்கள் நேரிற் கேட்டிருக்கவேண்டுமென்றும், அவ்வாறு நேராமைக்குத் தாம் வியசனிப்பதாகவும், ஆயினும், தாம் அவரிடம் ஷை விஷயங்களைத் தெரிவிப்பதாகவும், ஸபையில் அவ்விஷயத்தைப்பற்றிப் பேசியவர்களும் ஒருகூட்டமாகச் சென்று கனம் ஐயங்காரவர்களிடம் ஷை விஷயங்களைத் தெரியப்படுத்திக்கொள்ளவேண்டுமென்றும், பரிபாடற் பாட்டிற் கூறிய கிரகநிலை ஆராய்ச்சியில் ஏற்பட்ட ஆக்ஷேபஸமாதானங்களை எழுதிச் செந்தமிழில் வெளியிடவேண்டுமென்றும் அபிப்பிராயங் கூறினார்கள்.

அன்று பிற்பகல் 4½ மணிக்கு மறுபடியும் ஸபைகூடியது. ஸ்ரீமத். சந்தானமையங்காரவர்கள் கடவுள்வாழ்த்துப் பாடினார்கள். அக்கிராசனரான ஸ்ரீமான் K. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் ஐந்துமணிக்கு விஜயம் செய்வதாயிருந்தமையால், ஸபையோர் விருப்பப்படி மஹாமஹோபாத்தியாய ஐயரவர்களே ஸபைத்தலைவராயிருந்தார்கள். முதலில் திருநெல்வேலி ஹிந்து கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். மு. சொர்ணம்பிள்ளையவர்கள் திருக்குறளுரைநுட்பம் என்ற விஷயமேற்கொண்டு, தமக்குக் கிடைத்த திருக்குறட் பழையவுரையேட்டுச்சுவடியொன்றிற்கண்ட சிலவிஷயங்களை எடுத்துப்பேசினார்கள். இவர் பேசிமுடிக்குமுன் அக்கிராசனரான கனம் ஐயங்காரவர்கள் விஜயம் செய்தார்கள். (பின்பு, கனம் ஐயங்காரவர்களும், மஹாமஹோபாத்யாய ஐயரவர்களுமாகிய இருவரும் ஸபாநாயகர்களாக இருந்து ஸபையை நடத்தினார்கள்.)

பின்னர், சென்னை ஸ்ரீமத். K. சதாசிவசெட்டியார் B.A., அவர்கள் திருவள்ளுவர் என்ற விஷயமேற்கொண்டு திருக்குறளின் பெருமையையும், திருக்குறளிற் சொல்லப்பட்ட விசேஷதர்மங்களையும், தேவார திரு

வாசகர்களும் திருக்குறளும் ஒத்தகருத்துடையன என்பதையும், திருவள்ளுவரது வாக்குநயத்தையும் உவமை கூறுந்திறத்தையும் தக்க மேற்கோள்களால் விளக்கி யுபந்யசித்தார்கள்.

அதன்பின், திருநெல்வேலி இந்துகலாசாலைத்தலைவர் ஸ்ரீமத்-M. S. பூர்ணலிங்கம்பிள்ளை M. A. அவர்கள், ஊசிமுறி என்றவிஷயத்தை எடுத்துக்கொண்டு ஊசிமுறி என்பது இடைக்காடர்செய்தநூலென்றும், அதன் பெயர்க்காரணம் இதுவென்றும், கடைச்சங்கத்தார் பொறாமையும் செருக்கும் உடையராய், தங்கள் ஸபையில் நூலரங்கேற்ற விரும்பும் புலவர்களை அவமதித்துவந்தனரென்றும், அதுபொறாத இடைக்காடர் அவர்கள் செருக்கொழிக்கக் கருதி இந்நூலை இயற்றினரென்றும், இந்நூற்கு ஒன்பதாறு என வேறொருபெயரும் வழங்குமென்றும், இதனாற் சங்கத்தார் இவ்விதம் செருக்கொழிந்தனரென்றுங் கூறி, அந்நூலிலிருந்து சிலபாடல்களையும், அந்நூலிற் பயின்றுள்ள சில ஒலிக்குறிப்புக்களையும் படித்துவிளக்கினார்கள்.

அதன்பின், கும்பகோணம் இராசாங்கக்கலாசாலை யுபாத்தியாயர் ஸ்ரீமத்-K. C. வீரராகவையரவர்கள் தாமெழுதிய குமரிக்கருமணல் என்ற வியாசத்தைப்படித்தார்கள்.

பின்னர், மதுரையிலுள்ள இராமேஸ்வரதேவஸ்தான பாடசாலைப் பிரின்ஸிபால் வித்யாநிதி-ர. கிருஷ்ணமாசாரியர் M. A. அவர்கள் வடமொழியும் தமிழும் என்ற விஷயத்தை எடுத்துக்கொண்டு வடமொழி நூல்களில் இல்லாத அரியகற்பனைகளும் சிலசித்தாந்தங்களும் தத்துவங்களும் தமிழிற் கம்பராமாயணம் முதலியநூல்களிற் காணப்படுகின்றனவென்று தக்க ஆதாரங்காட்டி உபந்யசித்தார்கள்,

அதன்பின், ஸேதுஸம்ஸ்தானவித்வான் ஸ்ரீமத்-ரா. இராகவையங்காரவர்கள், தமிழைப்பற்றிய ஆராய்ச்சி என்ற விஷயமேற்கொண்டு, ஸம்ஸ்கிருதம்பயில்வார் வடதிசையில் மிக்குள்ளமையால் அதனை வடமொழியென்றும், தமிழ்பயில்வார் தென்றிசையில் மிக்குள்ளமையால் அதனைத் தென்மொழி என்றும் கூறுவரென்றும், வடமொழி உலகத்துக்குப் பொதுவென்றும், வடதிசையாண்டவனாகிய இராமபிரான் தென்மொழியிலும் தேர்ச்சிபெற்றவன் என்றும், வடமொழியும் தென்

மொழியும் பெருமை சிறப்புமுதலியவற்றால் ஒப்புமையுடையனவென்றும், வடமொழிவேதமுதலியனவும் தென்மொழிவேதமுதலியனவும் ஒற்றுமையுடையனவென்றும் வடமொழி தென்மொழி வேதங்களிலிருந்தும் தக்கநூல்களிலிருந்தும் மேற்கோள்காட்டிச் சபையோர் வியந்துகொண்டாடும்படி பேசினார்கள்.

அதன்பின், மதுரை அமெரிக்கன்கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத் ஆ. கார்மேகக்கோனாரவர்கள் தாம் எழுதிய மதுரைக்காஞ்சியாராய்ச்சியில், நேரமின்மையா லிடையிடையே சிலபாகத்தைப் படித்தார்கள்.

பின்னர், சங்கத்தின் கௌரவகாரியதரிசி ஸ்ரீமத். T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் காலமதிகரித்துவிட்டதனால், சென்னை லெக்ஸிகன் கமிட்டி தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத்-மு. ராகவையங்காரவர்கள் அனுப்பியிருந்த தைந்நீராடல் என்ற வியாச முழுவதையும் படிக்க இயலாமையால் அதன் சுருக்கமான விஷயத்தை விளக்கிச் சொன்னார்கள்.

அதன்பின், மஹாமஹோபாத்தியாய ஐயரவர்கள் நடந்த உபந்யாசங்களையும் படித்தவியாசங்களையும் பாராட்டிப்பேசி, ஊசிமுறியைப் பற்றிச் சொல்லுமிடத்துச் சங்கப்புலவர்கள் இடைக்காடரிடமும் மற்றப் புலவர்களிடமும் பொறாமைகொண்டார்களென்று கூறுவது பொருந்தாதென்று மேற்கோள்காட்டியும், ஊசிமுறி அச்சிட்டு வெளியிடப்படுமானால் அதைப்பற்றிய விவரங்களையெல்லாம் அறிந்து மகிழலாமென்றும் அபிப்பிராயங்கூறி, அவர்களே தமிழ்ப்புலவர்களையும் உரையாசிரியர்களையும்பற்றிப் பேசத்தொடங்கித் தொடித்தலைவிழுத்தண்டினார் முதலிய புலவர்களின் பெயர்க்காரணத்தையும் அவர்களியற்றிய செய்யுட்களிலமைந்த ஆழ்ந்த கருத்துக்களையும் சிந்தாமணியுரை நன்னூல் மயிலைநாதருரைகளிலுள்ள நுட்பங்களையும் விளக்கிச் சபையோர் கொண்டாடும்படி உபந்யசித்தார்கள்.

அதன்பின், சங்கத்தின் கௌரவகாரியதரிசியாகிய ஸ்ரீமத்-T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள், அக்கிராசனரான கனம்பொருந்திய K. ஸ்ரீநிவாஸையங்காரவர்களையும், சென்னை ஹைகோர்ட்டு வக்கீல் ஸ்ரீமத்-C. P. இராமஸ்வாமிஐயரவர்களையும், மதுரை பாரிஸ்டர் மகாா-ா-ஸ்ரீ P. T. ராஜன் அவர்களையும் சங்கத்தின் சாசுவத அங்கத்தினராகவும், அபிரா

மம் வித்பாபாஸ்கர செந்தமிழ்ச்சங்கத்தின் அக்கிராசனரான ஸ்ரீமத்- D. நாகலிங்கம்பிள்ளையவர்களைச் சாதாரண அங்கத்தினராகவும் சேர்த்துக் கொள்ளவேண்டுமென்று பிரேரணை செய்யச் சபையோர் அதனை அங்கீகரித்தனர்.

அதன்பின், மதுரை ஸெளராஷ்டிரஉயர்தர கலாசாலைத் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமத்.P. சிதம்பரபுன்னைவனநாதமுதலியாரவர்கள் தாம் இயற்றிய மங்களவாழ்த்தைப் படித்தனர். பின்னர், சங்கக்கலாசாலை யுபாத்தியாயர் ஸ்ரீமத். ஹரிஹரையரவர்களால், யாழ்ப்பாணத்துச் சுன்னாகம் இராமநாதவித்யாலயத்தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். K. S. நவநீதகிருஷ்ண பாரதியவர்கள் அனுப்பியிருந்த மங்களவாழ்த்தும்,சிதம்பரம் ஸ்ரீமீனாக்ஷி கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். சர்க்கரை இராமசாமிப்புலவரவர்கள் அனுப்பியிருந்த செய்யுளும் படிக்கப்பட்டன.

அதன்பின்னர், அக்கிராசனரான கனம் ஐயங்காரவர்கள் நடந்த உபந்யாசங்களையும் படித்தவியாசங்களையும் சிலாகித்து இம்முறையே மேலும் தமிழை அபிவிருத்திசெய்வதற்கு எல்லாரும் தக்கபடி முயன்றுவரவேண்டுமென்று கூறி முடித்தார்கள்.

அதன்பின், மதுரைவக்கீலும் சங்கத்தின் நிர்வாகசபையங்கத்தினருமான ஸ்ரீமத். P. சுப்பராயஐயரவர்கள் அக்கிராசனருக்கு வந்தனங் கூறவும், சங்கத்தின் கௌரவகாரியதரிசி ஸ்ரீமத். T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் ஸபைக்கு விஜயம்செய்தவர்களுக்கும் பிறர்க்கும் வந்தனங் கூறவும் கடவுள்வாழ்த்துடன் இரவு 8-மணிக்கு ஸபை இனிது நிறைவெய்தியது.

---

மாடமதுரைவளருந்தமிழ்ச்சங்கம்
நீடுபுகழ்பெற்றுநிலைபெறுக—வடலர்தார்த்
தேவைத்துரைபைத்திறன்முத்துராமலிங்கக்
கோவைத்தலைவனெனக்கொண்டு.

---

சுபம்.

உதவிப்பத்திராதிபர்.

சென்னை எக்ஸிகியூடிவ்கவுன்சில் மெம்பரும் ஸர்வகலாசாலையின்
உப அக்கிராசனாதிபதியுமான
ஸ்ரீமாந். K. ஸ்ரீநிவாஸ ஐயங்காரவர்கள் அக்கிராசனராக
துன்மதிஞு புரட்டாசிமீ உ௨ (17—9—21) நடைபெற்ற
மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் இருபதாம் வருடக் கொண்டாட்டத்தில்
தமிழ்ச்சங்கக்கலாசாலை உபாத்தியாயர்
சு. நல்லசிவன்பிள்ளையவர்கள் பாடிய மங்களவாழ்த்து.

நிலைமண்டில ஆசிரியப்பா.

---

கங்கையும் யமுனையுந் துங்கபத் திரையும்
பொங்குநீர்ப் பொருநைப் புண்ணிய நதியும்
பூவிரி தண்புனற் காவிரி யாறும்
இருநில மதனிற் றருவளன் யாவும்
வையை யென்னும் பொய்யாக் குலக்கொடி
நாடொறு நல்கும் பீடொருங் குடைத்தாம்
மழைதவழ் குடுமி மாடக் கூடற்
றிருநக ரிதனிற் பெருவரைத் தோன்றிப்
பாண்டியர் தம்பா லீண்டி வளர்ந்து
சங்கத் தமர்ந்த துங்கத் தமிழ்மகள்
தென்னவர் தமக்குப் பின்னவ ரேயெனுஞ்
சேது காவலர் பாதுகாப் புற்றிவ்
வுலகினி னிலவுத லுணரா ரெவரே
மும்மன்னர் விழையு மம்மன்னர் மரபிற்
சென்னியர் போற்றுங் கன்னிநன் னாடு
பண்ணிய தாகிய புண்ணிய மனைத்தும்
ஓருருக் கொண்டு பாரிடைப் பிறந்தென
வந்து தோன்றிய செந்தமிழ் வள்ளலாம்
பாற்கான் போன்மிளிர் பாற்கர பூபனும்
பலகலை யுணர்ந்த புலவர்முன் புரிந்த
சிலமனைத் துந் திரண்டெனத் தோன்றிப்

பாலவ னத்தப் பதியாள் குரிசிலாய்
அமிழ்தெனப் போற்றுந் தமிழ்நல முணர்ந்த
பாண்டிப் பெருந்தவப் பாண்டித் துரையும்
தன்னே ரில்லாத் தமிழ்தழைத் தோங்கற்
குறுதுணை யாயிவ ணிறுவிய தண்டமிழ்ச்
சங்கஞ் சிறந்து தன்னே ரிருபான்
வயதுற்று வளருமிம் மங்களத் திருநாள்
மாண்புறத் தலைமை வகித்தமன் யாரெனில்
நன்னலர் திகழுஞ் சென்னையம் பதியில்
உயர்தர நீதிப் பெயர்தரு பதியாய்
நன்றறி வார்திகழ் மன்றத் தமர்ந்தோன்
சென்னைக் கவர்னர் மன்னிய சபையில்
மன்னவர் நீதி வாதியென் றுரைக்கும்
நிகரிலாச் சட்ட நியாமக னென்
துரைத்தன சபையிற் றிருத்த மமைக்கு
நிருவா கப்பெறு மொருபே ரறிஞன்
கனம்பெறு சருவ கலாசங் கத்திலும்
இணையிலா துறையுந் துணையதி பதியாய்
ஏழ்நிலம் புகழ வாழ்வுறு பெரியோன்
பைந்துழாய் முகிலைச் சிந்தையிற் பரவி
வந்தனை புரியு மந்த ணாளன்
மாநிலம் புகழுஞ் சீநி வாசப்
பேர்புனைந் துயர்ந்த பெருமை யோனே
கல்வித் தலைமைக் கனம்பெறு மிவ்வேள்
இப்பெருந் திருநாட் கினிதெழுந் தருளித்
தலைமை யார்ந்த நிலைமையுற் றதனால்
தமிழுஞ் சங்கமுந் தழைத்திடு மெனற்கிங்
ஐயஞ் சிறிதும் வையகத் தின்றே
இந்திர சபைபெறு மிப்பெருஞ் சபையில்
ஆரிய மென்னும் பாரிரும் பௌவக்
கரைகண் டுயர்ந்த வுரைவல் லாளருந்
தண்டமிழ் முந்நீ ருண்டவல் லுநரும்
இசைநா டகத்தி னிசைசேர் குநரும்

ஆய்ந்திர முணர்ந்த சாந்தமிக் கோரும்
ஓங்கிய நல்லிசை யாங்கில நிபுணரும்
செல்வத் துயர்ந்த சீரியர் பலரும்
கல்வியி லுயர்ந்த காட்சிமிக் கோரும்
ஒருங்கு நிறைந்து சிறந்தன ரன்றே
இன்னோர் குழுமு மியல்பினை யன்றோ
சங்கமுங் கழகமுஞ் சபையுமென் றுரைப்பர்
சங்க மிருந்து தமிழா ராயும்
மங்கள மிகுமிம் மதுரைமா நகரில்
இப்பெருங் கூட்டம் இன்றியமை யாதென்
றுளங்கொடெல் லோரும் வளம்பெறத் தகுந்த
ஒற்றுமை நயத்தை முற்று முணர்த்தி
நந்தமிழ் நாடு நலம்பெறக் கருதி
யாண்டு தோறு மீண்டுக் குழுமி
நல்லறி வென்னும் பல்கதிர்த் தீபம்
ஏற்றி விளக்குத லியல்பா மன்றே
சாருமிச் சபையுஞ் சபையின் றலைவனும்
சங்கமுஞ் சங்கத் தமிழுந் தலைவரும்
சங்க மீண்டுத் தழைத்தற் கேதுவாம்
சேது காவலர் மேதகு மரபும்
நிரந்தர போஷக துரந்தர ரான
புதுவை மாநகர்ப் புரவலர் மரபும்
சிந்தை வாக்குத் தேக மிவற்றாற்
சங்கத் துதவுந் தமிழபி மானரும்
இந்திய நாட்டினை யிதமுறப் புரக்கும்
ஐந்தாம் ஜார்ஜெனும் அரசர்கோ மகனும்
நிலவுல கதனிற் பலபகல் வாழ்வுற
வுலக காரண னொருதனி முதல்வன்
இலகு சேவடி யிறைஞ்சுது மினிதே.

---

# செந்தமிழ்

## நேரிசைவெண்பா.

---

தேங்கமழும் பூங்கமலச் செல்வத் தெரிவையர்க்கு
நீங்கரிய வாச நிலையென்ப—வோங்குயர்சீர்ப்
பொன்னிதியுந் தூய புகழ்நிதியு நல்குதமிழ்
நன்னிதியார் கூட னகர். (1)

இருநாழி நெற்கொண் டினிதா மறங்க
ளொருநாலெட் டும்புரியு மொப்பில்—பெருமாட்டி
யாண்டது மெம்மா னறுபத்து நான்காடல்
பூண்டதுங் கூடற் புரி. (2)

இந்நகரை யாண்டின் னியற்றமிழை யாதரித்த
தென்னவர்க்குப் பின்பச் செழுந்தமிழைப்-பொன்னிணைப்போற்
பாரிப்பார் சேது பதிவேந்த ரென்பதனை
யாரிப்பா ரிற்றெரியா தார். (3)

அம்மன்னர் தம்பா லமைச்சுரிமை பூண்டுலகி
லெம்மன்ன ரும்போற்று மேற்றத்தான்—மும்மன்னர்
போற்று பலதமிழ்நூல் பொன்று திருப்பவச்சி
லேற்றி யிவணல் கிறை. (4)

தக்கோர் புகழ்பொன்னுச் சாமி வரோதயனுந்
திக்கோர் புகழ்வேளின் செல்வனென—வெக்காலும்
வேண்டிப் புலவருக்கு வேண்டிற் றுதவுகொடைப்
பாண்டித் துரைப்பூ பதி. (5)

அன்ன பெரியோ னறம்விளங்க நாட்டியிவண்
மன்னுதமிழ்ச் சங்கம் வயதிருபா—னென்ன
வளரும் பருவவிழா மன்னனென வந்தான்
வளரும் பெருமதிநேர் வான். (6)

நீல மணியு நெடுமுகிலுங் காயாவும்
வேலையு மென்னமிளிர் மேனியான்—கோலமலர்த்
தாள்பரவு மெய்யான் சகத்தெவர்க்கு மெய்யான்பூ
வேள்பரவு மெய்யான் விழைந்து. (7)

ஓது புவிமே லுயர்நீதி மன்றத்தில்
நீதி பதியாய் நிலவியே—மேதகையோர்
போற்றவதி காரம் புரிந்தோன் புரிமுந்நூ
லேற்ற மறையோர்க் கினன். (8)

சொல்லாருஞ் சென்னைத் துரைத்தனநிர் வாகமிகு
வல்லார் புகழமைச்சர் மன்னவையில்—நல்லார்க்கு
நாயகமா வீற்றிருந்து நன்மைசெயுந் தன்மையினன்
றூயகமா னெவர்க்குந் தான். (9)

தன்னிகரில் சென்னைச் சருவ கலாசாலை
தன்னிற் றுணைத்தலைமை சார்ந்துள்ளோன்—மன்னர்
புகழ்நீதி வாதியெனப் போற்ற வுயர்ந்தோன்
மகிழ்சீநி வாசனு மன். (10)

செல்வத்தாற் கல்வியாற் றேசாற் றிறமையினாற்
சொல்வித் தகரிறைஞ்சுந் தோற்றத்தாற்—றொல்புவியின்
மிக்கோ னிவனென்ன வேந்தவையிற் றேர்ந்தெடுத்த
விக்கோன் வாவிங் கினிது. (11)

சருவகலா சாலைத் தலைமை வகிக்கு
மொருவனு மிந்த வுரவோன்—பெருகினிமைப்
பைந்தமிழைக் கட்டாயப் பாடமா வாங்கிலத்தோ
டிந்தியர்க்குச் செய்யு மிசைந்து. (12)

பன்னு பலநூலின் பண்டிதரை யன்னோர்செய்
நன்னூலை யாதரித்தெந் நாளுமே—யன்னவருக்

கூக்கங் கொடுத்து முபசரித்து நந்தமிழைக்
காக்குங் கடமையிவற் காம். (13)

ஆதலினிக் கோமான்மிக் காயுள் சிறந்தோங்கி
மேதினியில் வாழ விழைவுறுமிவ்—வோதரிய
நற்சபையுஞ் சங்கமுமெந் நாளுந் தழைக்கவிறை
பொற்சரண்வந் திப்பாம் புரிந்து. (14)

தேவைத் துரையாய்ச் செகம்புரப்போன் செந்தமிழோர்
கோவைத் துறைபலவுங் கொண்டகோ—பூவைப்
பொருந்து கலைமாதும் பொன்மாதும் பூவும்
பொருந்துநா மார்பப் புயன். (15)

இம்மதுரைச் சங்கத் திறையவனு கித்தினமு
மெம்மையெலாங் காக்கு மியல்பினன்—செம்மைதிகழ்
மால்ராஜ ராஜேச் வராச சேகரன்றன்
வேல்வாழ்க வாழ்கபுகழ் மெய். (16)

ஒற்றைத் தனித்திகிரி யோச்சிப் புவிவிளக்குங்
கொற்றச் சுடர்போற் குவலயத்தை—முற்றும்
இறைபுரியும் ஐந்தாம்ஜார் ஜென்னுமண்ட லேசன்
முறைசிறந்து வாழ்கபுவி மூன். (17)

மறைவாழ்க வான மழைவாழ்க மன்னர்
முறைவாழ்க வாழ்க முனிவோர்—பொறைசேர்
நிரைவாழ்க தெய்வ நிலைவாழ்க நீடு
தரைவாழ்க வாழ்க தமிழ். (18)

---

ஸ்ரீ

# மதுரைத் தமிழ்ச்சங்கத்தின்

## இருபதாம் வருடக்கொண்டாட்டத்தில்,

சென்னை எக்ஸிகூடிவ் கௌன்சில் மெம்பரும், சர்வகலாசங்கத்தின்
உபாக்கிராஸனாதிபதியுமான
மாட்சிமைதங்கிய

## கே. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள்

அக்கிராசனராயிருந்து

## செய்த உபநியாசம்.

சேதுபதியவர்களுக்கும் வித்துவான்களுக்கும் மற்றும் ஸபையோர்களுக்கும் வந்தனம்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் இருபதாம் வருஷோத்ஸவத்தில் என்னை ஸபாநாயகனாயிருக்கும்படி, சங்கத்தலைவரான இராமநாதபுரம் ராஜா அவர்கள் கேட்டார்கள். என்னிடம் மிகுந்த அன்புடையரான நண்பர்கள் பலரிருக்குமிடமாயும், நான் பிறந்த ஊரைப்போல் என் அபிமானத்திற் குடிகொண்ட புராதன க்ஷேத்திரமாயுமுள்ள இம்மதுரைமாநகருக்குவந்து ஆநந்திக்கலாம் என்ற ஆசையால் ராஜா அவர்கள் விருப்பத்திற் கிணங்கினேன். கல்வி கேள்விகளிற் சிறந்தவரும் நான் இங்கு வரும்போதெல்லாம் என்னுடன் இனிமையாக அளவளாவும் ஆப்தநண்பருமான இந்நகரவாசி மாதுவையரவர்கள் காலஞ்சென்றது மனதை வருத்துகின்றது.

தமிழறிஞர் கூடியிருக்கும் இச்சபையில் தாய்மொழியாகிய தமிழிலேயே பேசவேண்டுமென்று எனக்குக் கட்டளையாயிற்று. பாஷாபிமானம் குறைவில்லாதிருந்தும், தமிழ்க்கல்வியிற் பாண்டித்யமும், ஸபையில் தமிழிற்பேசுந் திறமும், தமிழிற் சிந்திக்கும் பழக்கமும் இல்லாமையால் இம்மஹாஸபையில் தமிழிற்பேச அச்சத்தோடு என் அபிப்பிரா

யங்களை எழுதி என் நண்பரும் தங்கள் காரியதரிசியுமான டி. வி. ஸ்ரீநிவாஸையங்காரைக்கொண்டு பார்வையிடச்செய்தேன். அதனால் நான் சொல்வதில் ஏதேனும் தவறுதலிருந்தால் அது அவரைச் சேர்ந்ததாகும்.

ஸபையோர்களே!

சென்ற சொற்பகாலமாக மேற்றேயத்தார்கூட்டுறவும் அவர்கள் கல்வியறிவும் பரவியதில் அவர்கள்நாகரிகத்தில் ஒருவிதமான கௌரவ புத்தி ஏற்பட்டிருந்தாலும் ஆத்மார்த்தமில்லாத கேவலம் லௌகிகவித்தையும்,பொருள்சேர்க்கும் உபாயமும் முறையும் பயில்வதே புருஷார்த்தமாக அவர்கள் கைக்கொண்டிருக்கிறார்கள் என்பது வியக்தமாய்த் தெரிந்தது. இப்போது முடிவடைந்த ஐரோப்பிய யுத்தமும் அந்த வுண்மையையே வெளிப்படுத்தியது. பரமார்த்தமான விஷயங்களை அலக்ஷியம்செய்து பொருளும் பௌருஷமும் பிரதானமாகக்கொண்ட எந்த நாகரிகமும், நிலையற்றதென்றும், நம்முன்னோர்கள் கைக்கொண்ட தர்மார்த்த காம மோக்ஷபுருஷார்த்தங்களை முறையே கடைப்பிடித்து அநுஷ்டித்து வந்த ஆசாரமும், அவர்கள் வளர்த்த கல்வியறிவும், அவர்கள் நாகரிகமும் மேற்றேயத்தாருடைய கல்வியறிவொழுக்க நாகரிகங்களுக்கு எவ்விதமும் கீழ்ப்பட்டதில்லையென்றும் நம் தேசத்தார் நன்றாய்த் தெரிந்து கொண்டார்கள். நம்முன்னோர்களுடைய கல்வி யறிவொழுக்கங்களில் அபிமானமும் அவற்றை விருத்திசெய்வதில் ஊக்கமும் ஏற்பட்டிருக்கின்றன.

ஜாதிவேறுபாட்டினாலும் பாஷைவித்தியாசத்தினாலும் நம்தேசத்தாருக்குள் ஒற்றுமைக்குறைவு இருப்பினும், மனுஷ்யஜன்மத்தையடைந்த யாவரும் மேம்பாடடைந்து உஜ்ஜீவிக்கும் மார்க்கங்களிற் செல்லத்தக்க வுண்மையுபாயங்களை நம் பெரியோர்கள் கட்டளையிட்டிருக்கிறார்களென்பதை நன்குணர்ந்து நம் தேசத்தார் பரஸ்பர விசுவாசமும் ஐக்கியபுத்தியும் உடையாகிவருகிறார்கள்.

மேலும், சமீபத்தில் முடிந்த ஐரோப்பியமகாயுத்தத்தின்கொடுமையையும் அதனால் ஜனங்களுக்குப் பலவழிகளில் ஏற்பட்டகஷ்டங்களையும் ஜனங்கள் அறிந்தார்கள். இப்பால், சிற்சில கூடாவொழுக்கங்களேற்பட்டிருப்பினும் ஜனங்களுக்குள், ஜீவகாருண்ய ஒழுக்கத்திலும் பரோபகாரத்திலும் ஒரு விசேஷ அபிமானமும் உண்டாயிருக்கிறது.

இதனாலும், மேலேசொன்ன பல காரணங்களினாலும், நம்மவர், தேசாபிமானமும் பாஷாபிமானமும் மிக்குடையராய் நம்முடைய பழைய வழக்கவொழுக்கங்களைத் தெரிந்துகொள்ளவும் அவர்கள்காலத்திலுண்டான இலக்கண இலக்கியங்களைப் படிக்கவும் நம் தேசபாஷைகளை வளப்படுத்தவும் முயற்சிக்கிறார்கள்.

இக் காலதேசவர்த்தமானங்களுக்கேற்ப, ஸகலஜனங்களும் உயர்ந்த பொருள்களையும் எளிதிற் படித்தறிந்து கொள்ளக்கூடியதாக உத்தமமான மனோதர்மங்களைப் பிரகாசப்படுத்தக்கூடிய நல்ல நடையில் நம் தேச பாஷைகளை வளப்படுத்த முயன்றவர்கள் மஹாராஷ்டிரர்களும் வங்காளிகளு மாவர். அவர்களில், பண்டார்கார், ராஜேந்த்ர லாலமித்ர், டாகுர் முதலான பெரியோர்களை அறியாதார் யாவர்? டாகூர் என்னும் மகாகவி, ஒருநாடு, ஒருபாஷை, ஒரு ஜாதி யென்றில்லாமல் உலகமுழுதும் உணர்ந்து உறுதிப்பொருளையறியும்வண்ணம் பாடியவர்.

நம்தமிழ்நாடும் அந்நன் முயற்சியிற் பின்னடையவில்லை. கற்றோர்க்கு உபகாரிகளும், தமிழைவளர்த்த பெருந்தகையாளர்களுமான இராமநாதபுர ராஜவம்சத்திற் பிறந்தவரும், கல்விப்பயிற்சியையே பொழுதுபோக்காகக்கொண்டவரும், தமிழ்வல்லுநரும் சைவசீலருமாயிருந்த ஸ்ரீமான் பாண்டித்துரைத்தேவரவர்கள், செந்தமிழின் வளம்பெருக்கித் தமிழ்நாட்டை மேம்படுத்தக்கருதித் தமிழ்வல்லோர்களையும் தமிழ்வளர்ச்சிக்குதவியாகப் பிறபாஷையிற் பாண்டித்தியமுடையவர்களையும் ஒருங்கு சேர்த்து, அநவரதமும் அங்கயற்கண்ணியருள்நோக்குடைய இக்கூடன் மாநகரிற் பாண்டியர்களைப்போல் இச்சங்கத்தை ஸ்தாபித்தார்கள். நம் தமிழ்மொழியிலுள்ள பழைய இலக்கண இலக்கியங்களை நன்றாகப்படித்து அறிந்து ஆநந்திக்கும் ஆற்றல் எனக்கு இல்லாவிடினும், அவற்றின் மேன்மையையும் தமிழ்மொழி மற்ற எந்தப்பாஷைக்கும் தாழ்ந்ததாகாது என்பதையும் கற்றோர்கள் அபிமானிகள்வாயிலாகத் தெரிந்துகொண்டிருக்கிறேன்.

சிலகாலம் படிப்போரும் கேட்போருமின்றி அநாதரவடைந்து செல்லரித்த ஏடுகளில் மறைந்துகிடந்த பழைய சங்கநூல்களாகிய தமிழ் நிதியை வெளியிட்டு அவற்றைக் கற்றோரும் மற்றோரும் எளிதிலறிந்து படித்துப் பயனடையும்படிக்கும், தமிழ்மொழிவளர்வடையும்படிக்கும்

குறிப்புரை, அபிதானவிளக்கம், மேற்கோள்விளக்கம், விஷயசூசிகை முதலான அங்கங்களுடன் அச்சிட்டுத் தமிழுலகத்திற்குப் பேருபகாரம் செய்த மஹாமஹோபாத்யாய சாமிநாதையரவர்கள் இப்போது தமிழின் செவிலித்தாயாக விளங்குகிறார்கள். அவர்கள் இச்சங்க வருஷோத்ஸவத்துக்குவந்து ஸபையை அலங்கரித்திருப்பது யாவர்க்கும் மிகுந்த ஸந்தோஷத்தைக் கொடுப்பதுடன், தமிழபிவிருத்திக்கும் தக்க ஹேதுவாயிருக்கிறது.

இப்பொழுது நாடுமுழுதும் பரவிவரும் தேசபாஷாபிமானம் நன்மைதரத்தக்கதே. ஆனால் அது பிறபாஷையில் வெறுப்பையுண்டாக்காமலிருக்கவேண்டியது அவசியம்.

> "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்பது திருவள்ளுவர் அருளிய அருமைத்திருக்குறள். நமது தேசபாஷைகளில் ஏற்பட்டிருக்கும் பிரதானநூல்கள் பரமார்த்த விஷயங்களைப் பெரும்பாலும் பற்றியதென்று முன்னமே சொல்லியிருக்கிறேன். நல்வழியில் ஒழுகும் உலகவாழ்க்கைக்கும் தேசக்ஷேமத்துக்கும் காலதேச இயல்புகளையறிந்து தேசத்தார் பலவழிகளிலும் விருத்தியடைவதற்கும் ஹேதுவாக இக்காலத்து நவீன சாத்திரங்களும் கலைகளும் (Sciences) மேற்றேயத்தார் நூல்களில் அமைந்திருத்தலால் அவற்றைத் தமிழ் மொழியிலும் பிரகாசிக்கும்படி நக்கோர்கள் நூல்கள் செய்வதும், எல்லா விஷயங்களும் யாவர்க்கும் புலப்படும்படி பரவச்செய்வதும் இன்றியமையாதன.

எவ்விதமான தாற்பரியங்களையும், எவ்விதமான அறிவையும், வித்தையையும் தமிழ்மக்கள் அறிந்துகொள்ளும்படி தமிழில் நூல்கள் செய்பவர்களும் செய்விப்பவர்களும் நம்நாட்டின் கல்விச்செல்வத்தையும் அதுகாரணமாகப் பொருட்செல்வத்தையும் யாவரும் அடையும்படி உதவும் உபகாரியாவார்கள். அவர்களை அம் முயற்சியில் தூண்டி ஆதரவுசெய்து தமிழ்நாடு பயன்பெறச்செய்வது இத்தமிழ்ச்சங்கத்தின் கடமையாகும்.

அந்நோக்கமுடைமையும் அதில்முயற்சியும் அதுகாரணமாக ஏற்படும் கற்றோர்கூட்டமும் அதன்பயனான இலக்கியவிருத்தியும் அனன்

னியப்பிரயோஜனமான ஒழுக்கம் அறிவு முதலியவற்றின் வளர்ச்சியும், காலாநுகூலத்தில், தமிழர்களினபிமானத்தினல் இத்தமிழ்ச்சங்கத்தை ஒரு ஸர்வகலாசங்கமாக்கும்.

இச்சங்கத்தார் கொண்டிருக்கும் நோக்கங்கள் விசேஷமாக நிறைவேறுவதனல் நமதுநாட்டின் கல்வியறிவு நாகரிகம் முதலியன விசேஷ விருத்தியடையும். அவ்விதம் இத்தமிழ்ச்சங்கம் இம்மதுரைமாநகரிலிருந்து ஞானஒளிபரப்பும்படி அநுக்கிரஹிக்க ஸர்வேசுவரனைப் பிரார்த்திக்கிறேன்.

சங்கநோக்கங்கள் நிறைவேறக் கல்விச்செல்வர்களும் பொருட்செல்வர்களும் மாத்திரமன்றி மடாலயங்கள், தேவாலயங்கள் முதலியவற்றின் அதிபர்களும் விசேஷ உதவிபுரியவேண்டும்.

தேசபாஷைகளைவளர்க்கவும், அவற்ருல், சிறுவர்களுக்குப் பெரும்பாலும் கல்வி கற்பிக்கவும், அம்முயற்சிக்கு உதவிசெய்யவும் வேண்டுமென்று ராஜாங்கத்தாருக்கும் நோக்கம் உண்டு. 'சென்னை ஸர்வகலாசங்கத்தாரும் வித்வான்பட்டப்பரீக்ஷைவைத்திருப்பதுடன் நம்நாட்டுக்கல்வியில்வல்லவர்களுக்குப் புதிதாய் ஒருபட்டம் அளிக்கவும் ஆலோசித்துக் கொண்டிருக்கிருர்கள். அப்பட்டம்பெற்றவர்களைக் கலாசாலைகளிற் பண்டிதர்களாகத் தகுந்த சம்பளத்தில் நியமிக்கக்கூடும்.

ஆயினும் இந்நன்னேக்கம் பயன்படும்வண்ணம் பெருமுயற்சிசெய்ய வேண்டியது நம்மவர்கடமை. நமதுபாஷையைப் பலதுறையிலும் வளப்படுத்துவது நம்மவர்களுக்கு என்றுமழியாக் கீர்த்தியைக் கொடுக்கும்.

இவையெல்லாம் இனிதுமுடிப்பதற்கேற்ற கல்வி செல்வங்களிரண்டாலு நிரம்பிய சேதுமன்னரவர்களை நம்தமிழ்ச்சங்கம் நிரந்தர அக்கிராசனதிபதியாகப் பெற்றிருப்பது தமிழும் தமிழ்நாடும் புரிந்த புண்ணிய பலமாயிருப்பதால் இத்தமிழ்ச்சங்கம் மேன்மேலும் வளர்வுற்று உலகிற்கு மிக்க நன்மையைப் பயப்பிக்குமென் றெண்ணுகிறேன்.



# தமிழ்மொழிவளர்ச்சி.

முற்காலத்திருந்த பெருநிலமன்னரும் குறுநிலமன்னரும் பிரபுக்களும் தமிழ்நூல்களைக் கற்றுங் கேட்டும், தமிழ்ப்புலவர்களை மதித்தும், நூலுரைகளைச் செய்துஞ் செய்வித்தும், வேண்டும்பொருள் விடுத்தும் தமிழ்மொழியைப் பொன்போலப் போற்றிப் புலவர்பாடும் புகழும்பெற்று விளங்கினார்கள். புலவர்களும் பலவகை நூல்களைப் படித்தும், படிப்பித்தும், புதிய நூலுரைகள் செய்தும், நூற்பொருள்களைப் போதித்தும் மன்னரும் பிரபுக்களும் மதிக்கும் புகழும் பெற்று விளங்கினார்கள். இவ்விருவகையாரும்போல அழியாப் புகழ்பெற்றவர் யாவர். பாரதாமாயணாதிகளைப் பாடுவித்தார், பாடினார் என்னும் இருவகையார் புகழும் இன்னும் விளங்குதலை யாவர் அறியாதவர்! "தேடினார்யாவரேகொலெழுவகையானுஞ்சீர்த்தி—நீடினாரவரேயென்பர்நீணிலத்துயர்ந்தமாந்தர்" (பாரதம்).

தற்காலத்திலோ தமிழ்நூல்களைக் கற்றும், கேட்டும் மதித்துப் பேணும் மன்னர்தொகையுஞ் சுருங்கிற்று! பிரபுக்கள்தொகையுஞ் சுருங்கிற்று! கற்போர்தொகையுஞ் சுருங்கிற்று; புலவர்தொகையுஞ் சுருங்கிற்று! இங்கிலிசுபாஷையைக் கற்போர்தொகையும் வளர்கின்றது! கேட்போர்தொகையும் வளர்கின்றது! மதிப்போர்தொகையும் வளர்கின்றது! இங்கிலிசுபாஷை இதோபதேசம் என்னும் வடநூலிற் சொல்லிய "அர்த்தாகமவித்தை" போலும். அர்த்தாகமம்—பொருள்வரவு. பொருள் வரவு போதுமா? அறம் வேண்டாமா? இன்பம் வேண்டாமா? வீடு வேண்டாமா? அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கையுங்கொடுத்து நன்மைபயக்குந் தமிழ்மொழியைக் கைவிடலாமா? தமிழ்மொழியைச் சற்றும் பேணாது கைவிட்டார் பலர்! பரம்பரையாய்த் தமிழ்மொழியை வளர்த்துவந்த குலத்தோருள்ளும் பலர் பேணாதுவிட்டனர். ஆயினுஞ் சேதுபதியாசர்திருமாபினர் கைவிடவில்லை. ஸ்ரீமான் பாண்டித்துரைத் தேவரவர்கள் இந்தச் சங்கத்தைத் தாபித்து நடாத்திவந்தார்கள். இப்பொழுது மகத்துவம்பொருந்திய இராசராசேசுவரசேதுபதிமஹாராஜா அவர்கள் அக்கிராசனாதிபதியாய் வீற்றிருந்து நடாத்திவருகின்றார்கள். உபாக்கிராசனாதிபதியாயிருந்து ஆண்டிப்பட்டிச்செமிந்தார் ஸ்ரீமான் பெத்தாச்சிசெட்டியாரவர்களும் வேண்டுந் துணை செய்கின்றார். புதுக்கோட்டையாசரும் துணைசெய்கின்றார். நகரவசியருள்ளுஞ் சிலர்

துணைசெய்கின்றார். தனிகருள்ளுஞ் சிலர் துணைசெய்கின்றார். செய்தும் என்னை? பொருள்வரவு போதாது! மற்றைத்தனிகருள்ளும், இங்கிலிசுகற்று அதிகாரமும் பெற்றுப் பெரும்பொருள்வாங்கும் வைதனிகருள்ளும் பலர் துணைசெய்யவேண்டும். செய்யுங்கால் தமிழ்மொழி வளர்ச்சி இன்னுஞ் சிறக்கும். தனிகர்—செல்வர். வைதனிகர்—சம்பளம் பெறுவோர். புலவர் துணையும் வேண்டும்.

தமிழ்மொழிவளர்ச்சியின்பொருட்டு இச்சங்கத்தார் நடாத்திவருந் தமிழ்க்கலாசாலை, பரீக்ஷை, செந்தமிழ்ப்பத்திரிகை, பழந்தமிழ்நூற் பிரகடனம் முதலியன தமிழ்மொழி வளர்ச்சியைக் கிளர்ச்சிசெய்தே வருகின்றன. ஆயினும் நமக்குப் புலப்பட்டவைகளையுஞ் சொல்லுவாம்.

கலாசாலையிலே இன்னும் பலர்வந்து படிக்கும்பொருட்டுச் செல்வப்பிரபுக்களுடைய பொருளுதவியும் அரசினர்மதிப்பும் பெறுதற்கு வழிதேடவேண்டும். இக்கலாசாலைக்குக் கிளையாக மற்றையிடங்களிலும் ஆங்காங்குள்ள பிரபுக்கள் பொருள்சேர்த்துக் கலாசாலைகளைத் தாபித்து நடாத்திவரல்வேண்டும். பெருந்தொகைப்பொருள் செலவுசெய்து சிவாலய சம்புரோக்ஷணம், அன்னதானம், வேதபாடசாலை, தேவாரபாடசாலை முதலிய நடாத்திவரும் நகரவைசியர்களும் இவ்விஷயத்திலே மனம் வைக்கவேண்டும். சிவதருமங்களையும், பிறதருமங்களையும் தமிழ்மொழியே அறிவிக்கின்றது.

பரீக்ஷாபாடங்களாக நிகண்டுகளையும் திருக்கந்தாதிகளையும், யமகவந்தாதிகளையும் படிப்படி எல்லா வகுப்புக்களுக்கும் வைத்தல் நல்லது. பிரவேச பண்டிதபரீக்ஷை முதலியவற்றிற்கு வருவோரெல்லாரும் இவைகளைப் படித்தவரல்லர். இவை உயர்தரப் படிப்புக்கு ஆதாரமாய்நின்று சொற்பொருளுணர்ச்சியையும் சொற்றொடருணர்ச்சியையுங் கொடுக்கும் என்பர்.

துன்மதிஆண்டு முதலாக நடக்கும் பண்டிதபரீக்ஷா பாடங்களும் பிறவும் காலத்திற் படித்துமுடிக்க இயலாமல் அதிகப்பட்டுப்போயின என்று இங்கே படிக்கவிரும்பும் சில மாணவகரும் உபாத்தியாயரும் சொல்லக்கேட்டேம். அதனையும் ஆலோசிக்க.

அந்தப் பாடங்களுள்ளே தண்டியலங்காரமும், யாப்பருங்கலக் காரிகையும் "பழையவுரை" என்றிருப்பது நம்முரைகளையும் வேறுரைகளையும் படிப்போரைத் தடுக்கின்றது. இங்குள்ள மாணவகர் சிலர் அவைகளையும் விரும்புகின்றனர்.

செந்தமிழ்ப் பத்திரிகையிலே மதிப்புரை ஒன்றிலே பத்திராதிப ரவர்கள் இலக்கணபுத்தகம் ஒன்றிலே செயற்பாலனவான திருத்தங்களை யுஞ் சொன்னதுபோலப் பாடபுத்தகங்களிலும் நூலுரைகளிலும் பிற வற்றிலும்வரும் பிழைகளைத் திருத்தமுஞ் சொல்லிக் கண்டித்து வரல் வேண்டும். கண்டிக்குங்கால் அவைகளை ஆக்கினோரும், அவைபோன்ற பிறவற்றை ஆக்குவோரும் அச்சமுற்றுப் பிழைவாராமற் காக்கமுயலு வர். படிப்போருந் திருந்துவர்.

யாழ்ப்பாணத்திலே நாவலரவர்கள் பிழைகளோடும்வெளிப்பட்ட பாடபுத்தகம் முதலியவைகளைப் பெரும்பாலும் கண்டித்துவந்தார்கள். அதனாலே அவர்கள்காலத்திலே அடைந்த திருத்தங்கள் பல. இக்காலத் திலே இங்கிலிசுநடையோடும் பிழைகளோடும் வெளிப்படுவன பல. பிழைகள் என்னும் களைகள் நெருக்குமாயின், செந்தமிழ்ப்பயிர்வளர்ச்சி எப்படிச் சித்திக்கும்! இங்கிலிசு பாஷையைப் பலநாள் கற்றுப் பிழை யின்றி வழங்கமுயலும் மாணவகர் தமிழ்ப்பாஷையையும் அவ்வாறு வழங்கமுயன்றால் என்னை! இங்கிலிசு, தமிழ் என்னும் இரண்டுங் கற்ற செல்வப்பிரபுக்களே தமிழ்மொழியிலும் வேண்டுந் திருத்தங்கள் செய்தற் குரியர். அவர்வாக்கு நன்கு செல்லும்! தனியே தமிழ்ப்படித்தோர்வார்த் தையைக் கேட்பவர் யாவர்!

பழையநூற்பிரகடனத்தோடு இதுவரையும் வெளிப்பட்ட பரீக்ஷை வினாக்களையெல்லாம் ஒருங்குதிரட்டிப் பாகம் பாகமாய்ச் செந்தமிழ்ப் பத் திரிகையிற் பிரகடனஞ் செய்தலோடாவது தனியேயாவது ஒரு புத்தக மாக வெளிப்படுத்தல்வேண்டும், வெளிப்படுமாயின், பரீக்ஷைக்குப் படிப்போரும் பிறரும் எவ்விலையாயினுங் கொடுத்து வருடந்தோறும் வாங்குவர். படிப்போரெல்லாம் அடிக்கடி பயின்று தனித்தனி விடைகளை யும் ஆராய்ந்து பலநூல்களையும் படித்தலால்வரும் பயனையும் அடைவர்.

நீதிபதி ஸ்ரீமாந் கு. கதிரைவேற்பிள்ளையவர்களுடைய தமிழ்ச் சொல்லகராதியின் பிற்பாகம் இன்னும் வெளிப்படவில்லை. அதனையும் விரைந்து வெளிப்படுத்துதல் வேண்டும்.

இங்கே எழுதப்பட்டவைகளைக் கௌரவம் பொருந்திய அக்கிரா சனாதிபதியவர்களுஞ் சபையார்களும் சிந்தைசெய்து செயற்பாலன செய் தல் கடனாகும்.

தர்மஇ௵ ஆவணிமீ ௨௫ௗ

இங்ஙனம்,
அ. குமாரசுவாமிப்பிள்ளை,
சுன்னாகம்.

ஸ்ரீ:

# பரிபாடல் 11-ஆம் பாட்டின் கிரகநிலை.

---

'விரிகதிர்மண்டில'மென்ற பரிபாடலிற்சொல்லப்பட்ட சில கோள்களி னிராசிநிலையில் ஐயப்பாடுற்று ஸ்ரீமத். பண்டித S. சுப்பிரமணிய சாஸ்திரிகள் தமக்குத்தோன்றிய சில ஆக்ஷேபங்களை வெளியிட்டார்கள். (செந்தமிழ், தொகுதி-16. பகுதி-6-பக்-309-312.)

அவற்றைக்கண்ணுற்ற இலக்கணவிளக்கபரம்பரை ஸ்ரீமத். சோமசுந்தரதேசிகரவர்கள் செந்தமிழ்த் தொகுதி-19. பகுதி-8. பக்கம் 249 முதல் 255 வரை சோதிடப்பொருத்தமென்னும் வியாசத்தில் ஒருவாறு சமாதானம் சொல்லியிருக்கிறார்கள்.

அதை அநாதரித்து, மதுரைவக்கீல் மகா-ள-ள-ஸ்ரீ R. S. நாராயணஸாமி ஐயரவர்கள் பீ.ஏ. பீ.எல். இவ்வருடம் செப்டம்பர்மீ 18வ கூடிய மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் இருபதாம்வருடக் கூட்டத்தில், பண்டித S. சுப்பிரமணியசாஸ்திரிகளபிப்பிராயத்தைத் தழுவி அப்பரிபாடலிலும் உரையிலும் காட்டியபடி கிரகநிலையமைதலியலாதென்று சிலவற்றை ஆக்ஷேபித்துப் பேசினார்கள்.

அப்போது எனக்குத் தோன்றிய சிலவிஷயங்களைக்கொண்டு அப்பாட்டிலு முரையிலும் சொல்லிய கிரகநிலைகள் பொருத்தமுள்ளனவாயிருக்கலாமென்று காட்டினேன்.

அதைக் கேட்டுவந்த ஸபைத்தலைவரவர்கள் இவ்வாக்ஷேப ஸமாதானங்களைச் சுருக்கமாயெழுதிச் செந்தமிழில் வெளியிடவேண்டுமென்று கட்டளையிட்டார்கள். அதற்கிணங்கி இதனை எழுதலானேன்,

ஸ்ரீமத். R. S. நாராயணஸாமி ஐயரவர்கள் சொல்லிய ஆக்ஷேபங்களும் அவற்றுக்கு ஸமாதானங்களும் இனி வருமாறு:-

முதலாவது ஆக்ஷேபம்:-அகஸ்திய நக்ஷத்திரமொன்றுண்டென்றும், அதற்கு ராசிமண்டலத்திற் சஞ்சாரமுண்டென்றும் சொல்லுவது, சோதிட கணிதவழக்கிலில்லாமையால் உண்மையாகமாட்டாதென்பதாம்,

சமாதானம்:—அகஸ்திய நக்ஷத்திரமுதிக்குங்கால் அதற்கு க்ஷத்திரியர் அர்க்கியங்கொடுக்கவேண்டுமென்றும், அதன் உதயாஸ்தமனங்களும், பலனும் புராணங்களிற் சொல்லப்படுகின்றனவென்றும் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். கந்தபுராணத்தில் மார்க்கண்டேயப் படலத்தில் மார்க்கண்டமுனிவர் பிறந்தகாலக் கிரகநிலைகளைக் குறிப்பிடுமிடத்து,

> "மீனமுமுடிந்தகாளுமேவுறமிதுனஞ்செல்ல
> வானமில்வெள்ளிதானுமொன்பானுமுச்சமாகுந்
> தானமுற்றினிதுமேவத்தபனனேமுதலாவுள்ள
> வீனையர்முனிவர்ராசிடந்தோறுமிருப்பமன்னே". (செய்-186)

(முனிவர்-அகத்தியர்)

என்றதனால் முனிவர் என்ற அகஸ்திய நக்ஷத்திரம் இராசிமண்டலத்திற் றன்னிடமாகிய சொக்ஷேத்திரத்திலிருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்பரிபாடலில், "பொதியின் முனிவன் புரைவரைக் கீறி மிதுனமடைய" என்றதனால் அகஸ்திய நக்ஷத்திரம் 'புரைவரை' என்ற உச்சவீட்டில்நின்றும்நீங்கி மிதுனராசியை யடைந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றால் அகஸ்தியநக்ஷத்திரத்துக்கு ராசிமண்டலத்தில் ஸ்வக்ஷேத்திரம் உச்சம் முதலிய இடங்களுண்டென்றும் அது ராசிமண்டலத்திற் சூரியாதி நவக்கிரகங்கள்போற் சஞ்சரிக்குமியல்புடையதென்றும் வெகுகாலத்துக்குமுன்புள்ளபெரியோர்கள் கண்டறிந்திருக்கிறார்களென்பது வெளியாகிறது. செந்தமிழ்த் தொகுதி 19 பக்கம்—335ல் இதன்கதி நாள் ஒன்றுக்கு 009 விகலையென்று காட்டப்பட்டிருக்கிறது. இதன்படி கணக்கிட்டால் 11 நாளில் ஒரு விகலையும், 660 நாளில் ஒருகலையும் 110 வருடத்தில் ஒருபாகையும், 3300 வருடத்தில் ஒரு ராசியும் கடந்துசெல்லுவதென்றும், ராசிமண்டல பரிவர்த்தி 1-க்கு 39600 வருடங்கள் செல்லுமென்றும் தெரிகிறது. சிலர் இதற்கு, ஸப்தரிஷிமண்டலம்போல 27000 வருஷமே போதுமென்கிறார்கள். அகஸ்திய நக்ஷத்திரம் சலனமில்லாத ஸ்திரநக்ஷத்திரமாயிருந்தபோதிலும் ஸ்திரமான சூரியனுக்கு, பூமி சலனத்தால் மேஷாதி ராசிமண்டலசஞ்சாரந் தோன்றுவதுபோலப் பூமியின் துருவாக்கிரசலனத்தால் அகஸ்தியநக்ஷத்திரத்துக்குப் பிரத்தியேகமாகப் பல்லாயிர

வருடங்களில் ராசிமண்டல பரிவர்த்தி தோன்றுவதும் யுக்த மாயிருக்கிறது. தேவர்களாலும் முனிவர்களாலும் செய்யப்பட்ட பழமை வாய்ந்து விரிந்த வேதாங்ககணிதநூல்கள் உபவேதங்கள்போ லப்பியசிப்பாரின்றி யிறந்துபட்டொழிந்த இக்காலத்திற் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடையார்க் கேற்றவாறு சுருங்கப்பயிலும் கணிதவழக்கிற் சொல்லப்படாமையால் நாம் அறிய முடியாதிருப்பதுகொண்டு அந்நூல்கள் பயின்றுவந்த முற்காலவழக்கிலும் அகஸ்திய நக்ஷத்திரவிருத்தாந்தம் இருக்கமாட்டாதென்று கருதுவது தகுதியாகாதென்று தோன்றுகிறது.

இரண்டாவது ஆக்ஷேபம்:—அப்பரிபாட்டிற் சொல்லிய கிரகங்களையெல்லாம் பாடினோர்கண்ணாரக்கண்டறிந்து சொல்லுதற்குரிய காலம் புலர்விடியலாகமாட்டாதென்றும் நள்ளிரவாயிருக்கவேண்டுமென்றுஞ் சொல்லியதாம்.

சமாதானம்:—ஒரு குறித்தகாலத்திலுள்ள கிரகநிலையை எழுதிவைக்கும் புலவர் அவற்றைக் கண்ணாரக்கண்டே எழுதிவைக்க வேண்டுமென்னும் நியதியில்லையென்பதை ஜாதகமெழுதுவாரும் கிரகஸ்புடம் பண்ணுவாரும் நவக்கிரஹநிலைகளைக் கண்ணாரப் பாராமலே அக்காலத்துக்கு முற்பட்டும் பிற்பட்டும் எழுதிவைப்பதால் அறியலாம். ஆவ்வாறே நல்லந்துவனாரும் அப்போதுள்ள பஞ்சாங்கரீதியாகவேனும் தாமே கணனம்செய்தேனும் சொல்லியிருப்பதாகக் கொள்ளலாம். அன்றியும் அப்புலர்விடியல் சூரியோதயத்துக்குமுன்பு நக்ஷத்திரங்கள் மறைந்துகொண்டுவரும்சமயமாயிருத்தலால் அவை கட்புலமாகவும் தெரியத்தக்கவையே. ஆனால் ஆவணிமுதற்றேதி புலர்விடியல்வேளையிற் சூரியன் கட்புலப்படாதிருப்பதுபற்றி அது சிங்கத்திலிருப்ப என வெளிப்படையாகக் கூறாது அங்கி உயர்நிற்ப என்றகுறிப்பாற் கொள்ளும்படி சொல்லியு மிருக்கிறார். மற்றக் கிரகங்களெல்லாம் அப்போது அஸ்தமனத்தையடுத்திருக்கும் மகராந்தமுதல் உதயத்திலிருக்கும் கடகாந்தம் வரை 6 ராசிக்குள்ளேயிருப்பதாலும் அவை அப்போது கண்ணாரக் காணத்தக்கவையே.

மூன்றாவது ஆக்ஷேபம்:—அங்கியுயர்நிற்ப என்றதனாற் கார்த்திகை யுச்சமென்று சொல்லப்படுகிறது. அப்படியானாற் சிங்கராசி உதயமாகி ஒருநாழிகை சென்றிருக்கவேண்டும். இப்போது 'புலர்விடிய' லென்றமை

யால், சூரியன் அதற்கும் பின்பு உதயமாகும்படி சிங்கத்தின்நடுப்பாகத்தி லிருக்கவேண்டும். அப்படியிருந்தால் அதற்கு ஏழாமிராசியாகிய கும் பத்தின் நடுப்பாகத்திற் சந்திரனிருக்கப் பூரணையுங் கிரகணமுஞ் சம்ப விக்குமே யல்லது ஆறு மிராசியாகிய மகரத்திற் சந்திரனிருக்கப் பூரணை யுங் கிரகணமும் வந்திருப்பதாகச் சொல்லுவது தவறென்பதாம்.

சமாதானம்:—ஒவ்வொரு நக்ஷத்திரமும் இரண்டேகால்நாழிகை வரை உச்சத்திலிருப்பதால் நக்ஷத்திரங்களின் உச்சவாக்கியங்கள் உச் சத்தின் அந்தியகாலத்தைக் குறித்ததாகக் கொள்ளவேண்டும். பரணி உச்சத்துக்குக் கடகராசி யுதித்து நாலேகால் நாழிகையே செல்லாகி யிருக்குமெனச் சொல்லப்பட்டிருக்கிறது. கடகத்தின் நாழிகை ஐந்தரை யில் மிஞ்சிய ஒன்றேகாலேயரைக்காலும் சிம்மாதியில் நாழிகை ஒன்றே அரைக்காலுமாக நாழிகை இரண்டரையும் பரணியின் உச்சம் சாய்ந்த பிறகு கார்த்திகையுச்சாதியிலிருந்தே செல்லவேண்டும். ஆகையாற் கார்த் திகையுச்சாரம்பமாகும்போதே சிங்கம் உதயமாகமாட்டாது. சிங்கமுதியா மையால் அதிற்பிரவேசித்திருக்கும் சூரியனுதித்தற்கும் அவகாசமில்லை. ஆகையால் ஆவணி முதற்றேதியிற் கார்த்திகை யுச்சாதியிற் சிம்மோதய மாவது சூரியோதயமாவது ஸம்பவிக்கமாட்டாதென்று தெளிவாயறிய லாம். சூரியன் சிம்மாதியிலிருப்பதால் அப்போது அதிலிருந்து மக ராந்தம் முடிய ஆறுராசிகளிற் சந்திரன் சஞ்சரிக்குங்காலமே வளர்பிறை யாகிய பூருவபக்கமாகும்; அதனுளடங்கிய பூரணையும் மகராந்தத் தோடு முடிவடையக்கூடியதே. பூரணையுண்டாவதற்குச் சூரியனிருக்கு மிராசியிலிருந்து ஏழாமிராசியிற் சந்திரனிருக்கவேண்டுமென்பது கணித முறையன்று. சூரியனிருக்கும் பாகையினின்றும் (6 ராசிக்குள்) 167-ம் பாகையிலிருந்து 180-ம் பாகையோடு பூரணை முடிந்துவிடவேண்டுமென் பதே கணிதமுறை. ஆதலாற் சிம்மாதியிற் சூரியனிருக்க அதிலிருந்து மகராந்தம்வரை 180-ம் பாகையோடு பூரணை முடிவடைவது யுக்தமா யிருக்கிறது. அதிற் கிரகணம்வந்ததாகச் சொல்லுவதும் தவறாகமாட் டாது. அன்று சூரியோதயமானபிறகே சந்திராஸ்தமனமாகவேண்டி யிருத்தலாற் புலர்விடியலிற் கிரகணமும் கண்ணாற்காணத்தக்கதேயாம். சூரியோதயமானபின்பு சந்திரன் கும்பத்திற் பிரவேசிக்கும்போது அபர பக்ஷப்பிரதமையும் கிரகணவிமோசனாரம்பமும் உண்டாகவேண்டுமாகை யால் இதிற் சொல்லப்பட்ட சந்திரக்கிரகணம் கிரஸ்தாஸ்தமனமுள்ள தென்று மறியத்தக்கது.

நான்காவது ஆக்ஷேபம்:—சூரியன் சிம்மத்திலிருக்கச் சுக்கிரன் விருஷபத்திலும் புதன் மிதுனத்திலு மிருப்பதாகச்சொல்லுவது பண்டித S. சுப்பிரமணியசாஸ்திரிகள் காட்டிய "வதாயெல ஸவெந ஸுயோகு ஜஸிதெள ஸவதஃ க்ஷயம் ।" என்ற வசனப்படி அஸம்பாவிதமென்பதாம்.

சமாதானம்:—"வதாயெல ஸவெநஸுயோகு ஜஸிதெள ஸவதஃ க்ஷயம்" என்ற வசனம் இன்னநூலில் இன்னபாகத்தில் இன்ன விஷயத்துக்காகச் சொல்லப்பட்டதென்பது விளங்கவில்லை. இதன் பொருள் சூரியனிருக்கும் ராசியிலிருந்து நாலாமிராசியிற் புத சுக்கிரர்கள் எப்படியிருக்கக்கூடும்? என்பதாம். இது ஏதோ ஒரு கணித சாஸ்திரரீதியான ஸ்புடக்கிரியையைப் பூருவபக்ஷம்பண்ணி ஆக்ஷேபிப்பது போலத் தோன்றுகிறது. சூரியனுக்கு நான்காவதுராசியிற் சுக்கிரனெப்படியிருக்கக்கூடும்? என்று வினவுவதால், பிராசீன ஜைனசாஸ்திர ஸ்புடக்கிரியாமுறையில் ஒரு சமயம் சுக்கிரன் நான்காவது ராசியிலுமிருப்பதாகக்காட்டக்கூடிய பக்ஷாந்தரம் இருந்ததாகவே வெளியாகிறது. இவ்வசனம் நான்காவதுராசியைமட்டும் மறுப்பதாகக் காட்டுவதால் மூன்றாவதுராசியிற் சுக்கிரன் ஏகதேசம் இருந்தாலு மிருக்கலாமென்பதை அங்கீகரிப்பதாயிருக்கிறது. இந்த வசனப்படி மூன்றாவது ராசியாகிய மிதுனத்தியிற் சுக்கிரனிருப்பதில் ஆக்ஷேபமில்லையென் றேற்படுகிறது. அதிலிருந்து சுக்கிரன் வக்ரத்தால் ஒன்றிரண்டு விகலை பின்தள்ளியிருந்தாலும் விருஷபத்திலிருப்பதாகவே ஏற்படும். இவ்வொன்றிரண்டுவிகலைகளைச்சிலநாழிகையுள், சுக்கிரன் கடக்கக்கூடுமாகையால் அன்று சூரியோதயமானபிறகு மறுநாளே சுக்கிரன் மிதுனத்துக்கு வரக்கூடிய நிலையிலிருக்கலாம். இந்த அற்பவித்தியாசத்தால் நான்காவதுராசியிலிருப்பதாகவைத்து உச்சத்திற் காணப்படவேண்டுமென்று தூஷிப்பது பொருந்தாது. ஏனென்றால், சூரியோதய சமயத்தில் ஒரு கிரகம் உச்சத்திலிருக்கவேண்டுமானால் அது சூரியனிருக்கும் பாகையிலிருந்து தொண்ணூறுபாகை விலகியிருக்கவேண்டும். பிரகிருதத்திற் சிம்மாதியிலிருக்கும் சூரியனுக்கு விருஷபாந்தத்திலிருக்கும் சுக்கிரன் 60 பாகையே விலகியிருப்பதால் உச்சத்திற் காணப்படவேண்டுமென்று தோஷம் சொல்லுதற்கு இடமில்லை. ஆனால், சூரியனிருக்கும் பாகையிலிருந்து சுக்கிரன் அதிசாரம் வக்கிரம் முதலிய காரணங்களாலாயினும்

வேறு பிரகாரணங்களாலாயினும் 60 பாகை விலக்கக்கூடுமோ? கூடாதா என்பதைப்பற்றி நுணுகிய கணிதநூல்வல்லார் ஆராயவேண்டும். இவ்வாறே புதனும் மிதுனந்தத்திலிருப்பதாகக்கொள்ளற் கிடமிருப்பதால், சூரியனைவிட்டுப் புதன் 30 பாகையே விலகியிருப்பதாக ஏற்படுகிறது. இவற்றில் ஏதேனும் சொற்பவித்தியாசமிருப்பதா யேற்பட்டாலும் அதை வாக்கிய கெணனத்துக்கும் திருக் கெணனத்துக்கும் உள்ள வித்தியாசம் போலப் பூர்வகால கெணனசாஸ்திரபேதத்தாலிருக்கக்கூடுமென்று கொள்ளற் கிடமிருப்பதால் அது தவறாகாது. 5000 வருடத்துக்குமுன் பிருந்த ஸப்தரிஷிநக்ஷத்திரமண்டலநிலையின்படத்தையும் இப்போதிருக்கும் ஸப்தரிஷிமண்டலநிலையின்படத்தையும் உற்றுப்பார்க்கும் பொழுது அதிலுள்ள நக்ஷத்திரங்களில் ஒன்றற்கொன்றுள்ள தூரங்கள் மிகவும் வித்தியாசப்பட்டு ஏற்றத்தாழ்வுள்ளனவா யிருக்கின்றன. அவ்வாறே பிறநக்ஷத்திர மண்டலங்களின் நிலைகளிலும் பூராட முதலியவற்றில் முன்பு நெடுந்தூரத்திலிருந்த இரண்டு நக்ஷத்திரங்கள் நாளடைவில் நெருங்கிக்கொண்டுவந்து இப்போது சமீபித்திருப்பனவாகத் தெரிகிறோம். இவற்றால், சூரியனிலிருந்து புதன் முப்பது பாகையும், சுக்கிரன் அறுபது பாகையும் சில சமய விசேஷங்களில் விலகக்கூடிய நிலையில் முன்பொருகாலத்திலிருந்திருப்பதாக நாம் தெரிந்துகொள்ளவேண்டுமென்று தோன்றுகிறது.

---

திரு. நாராயணையங்கார்,
பத்திராதிபர்.

உ

## நல்லந்துவனார் சோதிடப் பொருத்தம்.

ஆசிரியர் நல்லந்துவனார்பாடிய பரிபாடற் பதினோராஞ்செய்யுளின் முதற் பதினான்கு அடிகளால் இரண்டுவிஷயங்கள் நிச்சயமாகத் தெரிகின்றன. அவை, 1. அகத்திய நக்ஷத்திரத்தின் தோற்றம், 2. முதுவேனிற்குப் பின்வரும் கார்காலத்தின் றொடக்கம் என்பனவாம். இவ்விரண்டு விஷயங்களாலும் அறியக்கூடியவைகளை முதலில் ஆராய்ச்சி செய்வேன்.

## I. அகஸ்தியநக்ஷத்திரத்தின் தோற்றம்:—

ரவிமார்க்கத்தைக் (Ecliptic) காட்டும் நக்ஷத்திரவரிசையில் துருவக (Lon-gitude) அளவில் திருவாதிரைக்கும் புனர்வசுவுக்கு மிடையில் அகத்தியனுளது. சூரிய சித்தாந்த அளவுப்படி அகத்தியன் திருவாதிரையிலிருந்து $22\frac{2}{3}$ துருவகாம்சமும் புனர்வசுவிலிருந்து 3 துருவகாம்சமும் உள்ளது. (ஒருவட்டம்=360 அம்ஸம் அல்லது டிகிரி). வராஹமிஹிரர் பிருஹத்ஸம்ஹிதை12-வது அத்யாயத்தில் 21-ஸ்லோகங்களால் அகத்தியநக்ஷத்திரத்தைப் பற்றிக் கூறியிருப்பதில் இறுதி ஸ்லோகத்திற் சூரியன் உரோகிணியை யடையும்பொழுது அகத்தியன் ருேற்றம் மறைந்து, (Heliacal setting) ஹஸ்தத்தையடையும்பொழுது அகத்திபன் உதயமாகி, (Heliacal Rising) கட்புலனுக அறியப்படுமென்று கூறினர். பராசரு மப்படியே கூறினுர். சூரியசித்தாந்த அளவுப்படி உரோகிணியிலிருந்து $40\frac{1}{2}^{\circ}$ துருவகாம்சத்திலும் ஹஸ்தத்திலிருந்து $80^{\circ}$ துருவகாம்சத்திலும் அகத்தியனிருக்கிறது. உரோகிணியிலிருந்து 50 அம்சமென்றும், ஹஸ்தத்திலிருந்து 70 அம்சமென்றும் ஒருவர் கூறுகிறுர். சூரியன் உரோகிணியையடைந்து தாண்டி ஹஸ்தத்துக்குச்செல்ல நான்கு மாதமாகிறபடியால் அகத்தியன் நான்குமாதம் கண்ணுக்குப்புலப்படாது. ஆகையா லதற்குப் பொருத்தமாகப் பாடலை யறிதல்வேண்டும்.

சூரியனுல் மறைபட்ட அகத்தியன் மறுபடியும் வெளியே உதயமாகிக் கண்ணுக்குப் புலப்படும்போது தென்கிழக்குத்திசையில் அகத்தியனைநோக்கி வேதவிதிப்படி அர்க்கியப்கொடுத் துபசரிக்கவேண்டிய முறைகளை வராகமிஹிரர் 13 முதல் 18 ஸ்லோகங்களிற் கூறுகிறுர். மாத்ஸியபுராணத்திலும் பவிஷிய புராணத்திலும் விஷ்ணுரகஸியத்திலும் தனமாலையிலும் இது விவரமாகக் கூறப்பட்டிருக்கிறதென்று தெரிகிறது. சூரியன் கன்யாராசியையடைவதற்குமுன் மூன்றுதினங்களில் அகத்தியனுக்கு அர்க்கியங்கொடுக்கவேண்டுமென்று கருடபுராணத்திலும் கூறியிருப்பதை அநுசரித்து வடக்கே வங்காளத்தில் பாத்திரபதமாதத்தின் இறுதிமூன்றுதினங்களில் அகத்தியனுக் குற்சவம் நடக்கிறது. அகத்தியனது வெளிவரவினுல் பூமிக்கு மிகுந்தநன்மையும் பரிசுத்தமும் மழையுமுண்டாகுமென்று வராகமிஹிரர் 7 முதல்

12 ஸ்லோகங்களில் விரித்துக் கூறியிருக்கிறார். பரிபாடலில் "நெரித ரூஉம்" என்றதும் உரையில் 'இவ்விதிவழியால்' என்றதும் மேலேகாட்டிய முறைகளைத் தழுவியனவாகவே யிருக்கின்றன. ஆகையால் அப்பொழுது சூரியன் ஹஸ்தநக்ஷத்திரத்தை யடைந்திருத்தல்வேண்டும். தெற்கே பாண்டியநாட்டில்,சூரியன் ஹஸ்தநக்ஷத்திரத்தையடைவதற்குச் சற்று முன்னதாகவே தெரியக்கூடியது எந்தநக்ஷத்திரமென்று அடியிற் காட்டும் வேறுசிலகாரணங்களினால் நிச்சயிக்கவேண்டும்.

**II.** விரிகதிர்வேனி லெதிர்வரவு மாரி:—இதனால் அயனகாலம் கூறப்பட்டது.

மேலே முதற்பிரிவிற் கண்டிருக்கிற அளவுகளில் நக்ஷத்திரங்கள் மட்டும் குறிகளாயிருக்கின்றன. ஒவ்வொருநக்ஷத்திரத்தின் புடைபெயர்ச்சியும் பதினாயிரம் வருஷங்களிற்கூடச் சாதாரணமாய்க் கண்ணுக்குப் புலப்படாதாகையால் அவைகள் இருந்த இடத்திலேயே இருக்கின்றன என்று வைத்துக்கொள்ளவேண்டும். ஆகையால் நக்ஷத்திரங்களைப் பற்றியமட்டில் அவற்றின் அளவுகள் அநேகமாயிரம் வருடம் ஸ்திரமாயிருக்கும். சந்திரகதி, கிரககதி முதலியவை நக்ஷத்திரங்களால் மட்டும் அளவிடப்பட்டன. இவற்றை ஒரு சமயம் மூன்றுவீதிகளாகவும், பிறகு நான்கு மண்டலங்களாகவும், பிறகு ஒன்பதுவீதிகளாகவும் பிறகு பன்னிரண்டு ராசிவீதிகளாகவும் பிரித்தார்கள். இது ஸ்திரமான நக்ஷத்திர ராசிமண்டலம். சலனத்திலிருக்கிற வேறொரு அயனராசிச் சக்ர அளவும் உண்டு. பார்ப்பதற்குச் சௌகர்யமாயிருப்பதை யுத்தேசித்து இதனை ஐரோப்பிய கணிதங்களில் அதிகமாக உபயோகப்படுத்தி வருகிறார்கள்.

அயனராசி விவரம்:—ஒவ்வொருவருடத்திலும் இரண்டுமுறை மாத்திரம் இரவும் பகலும் சமகாலமாயிருக்கும். அவற்றில் ஒன்றை மகா விஷுவசங்கிராந்தி (Vernal equinox) என்றும் மற்றொன்றை ஜல விஷுவசங்கிராந்தி யென்றும் சொல்லுவார்கள். அப்பொழுது சூரியனிருக்கும் நிலை விஷுவத் தென்று சொல்லப்படும். இவை இரண்டயனத்துக்கும் மத்யகாலம். இவை ரவிமார்க்கமும் விஷுவத்ரேகையும் சந்திக்குமிடங்கள். இவற்றில் ஒன்றிற்கு ஐரோப்பிய சோதிடக்கணக்குகளில் மேஷாதிகுறி (First point of aries) என்று அடையாளத்துக்

காகப் பெயரிட்டிருக்கிறார்கள். இதிலிருந்து அயனாரம்பசக்கர மாரம்பித்து அளவிடப்படுகிறது. இந்த அயனராசிகளினாரம்பகாலத்தைப் பஞ்சாங்கங்களில் ஒவ்வொரு தமிழ்மீ 8உ யிலும் பார்க்கலாம். அயனராசியாரம்பத்திலிருந்து புறப்படுகிறதாகத்தெரிகிற சூரியன், வடக்கிலும் தெற்கிலும் சாய்ந்து சுற்றி ருதுபேதங்களை யுண்டாக்கி மறுபடியும் முதலிடம்வந்து சேருகிறான். இவ்விதம் சூரியன் செல்லும்பொழுது முதல் நான்குமாதம் வேனிற்காலமாகும். அதைத் தொடர்ந்து பின்வருவது கார்காலமாகும். இந்த ருதுகாலபேதங்கள், ரவி, பூமி இவைகளின் நிலைகளைமட்டும் பொருந்தியனவாயுள்ளன. மேற்கண்ட விஷுவத் அயனஸ்தானம் எப்பொழுதும் ஒரேநக்ஷத்திர இடத்திலிருந்தால் ருதுகால ஆரம்பங்கள் எந்தவருஷத்திலும் ஒரு சமயத்திலேற்படும். ஆனல் அப்படியில்லை. சொற்பகாலத்தில் வித்தியாசம் தெரியாவிடினும் பலவருஷங்களில் வித்தியாசம் தெரிகிறது. பூமி, பம்பரத்தைப்போலும் அந்தணன் நூற்கதிர்போலும் கல்லுரற் குழவிபோலும் கூட்டமெத்திழுக்கிறவர்கள் தலைபோலும் கொஞ்சங் கொஞ்சம் பக்கஞ்சாய்ந்து ரவிமார்க்கத்திற் செல்லுவதால் இந்த விஷுவத் குறியின் கதி (சலனம்) ஏற்படுகிறது. ஆதலால் பூமியின் துருவநுனியானது பம்பரத்தின் தலைபோலும் நூற்கதிரின் நுனிபோலும் குழவியின் நுனிபோலும் ஆகாயத்தில் ரவிமார்க்கத்தின் துருவத்தைச் சுற்றிவருகிறது. சூரியசித்தாந்த முதலான ஹிந்து சாஸ்திரங்களில் இந்த விஷுவத் அயனஸ்தானம் 27,000 வருஷங்களுக்கு ஒருதடவை ரவிமார்க்கத்தில் மேலேகண்டிருக்கிற ஸ்திரநக்ஷத்திர ராசிகளுக் கெதிராகச்சென்று வட்டம்சுற்றி மறுபடியும் முந்திய இடத்திற்குவருகிறதென்று சொல்லியிருக்கிறது. இதன்படி ஒரு நக்ஷத்திரத்தைத் தாண்டிச்செல்ல 1000 வருடங்க ளாகின்றன. அதாவது ஒரு டிகிரி துருவாம்சத்துக்கு 75 வருடங்களாகின்றன. ஐரோப்பிய சாஸ்திரங்களில் இந்த விஷுவத் குறியின்கதியை டிகிரியொன்றுக்கு $71\frac{1}{2}$ வருஷங்களாக ஒரு வட்டத்திற்கு 25, 868 வருஷங்களென்று சமீபத்திற் கணக்கிட்டிருக்கிறார்கள்.

இவ்விதக்கணக்குப்படி மேற்கூறிய விஷுவத்ஸ்தானம் சுமார்5000 வருஷங்களுக்குமுன் ரோகிணி நக்ஷத்திரத்தையும், 4,200 வருடங்களுக்குமுன் கார்த்திகையையும், அதற்குப்பிறகு சகாப்த ஆரம்பத்தில் அசுவினியையும் அடைந்திருந்தது. வராகமிஹிருடைய சூரிய சித்

தாந்தப்படி 1360 வருஷங்களுக்குமுன் ரேவதிக்குச் சமீபத்திலும் தற் காலத்தி லுத்திரட்டாதிக்குச் சமீபத்திலும் இருக்கிறது. சகாப்த ஆரம்ப நான்முதல் இதுவரை 22 நாள் வித்தியாசப்பட்டிருப்பதைப் பஞ்சாங்கத் திற் பார்க்கலாம். இவ்வயனராசி வித்தியாசங்களுக்குத் தக்கவாறு நக்ஷத் திரங்களின் தோற்றம் மாறுதலடையும். ஆதலால் உலகவியாபாரங்களில் இதை முக்கியமாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். சூரியனைச் சுற்றும் பொழுதேற்படுகிற பூமியினுடைய கிழமேல் சலனம் நக்ஷத்திர ராசியைக் கொண்டும் தென்வடல் சலனம் அயனராசியைக்கொண்டும் அளவிடப் படும். காலநிர்ணயத்துக் கிரண்டு அளவையும் அவசியம் வேண்டும்.

அகத்தியன் உயர்ந்த தன்னிடத்தைவிட்டுப் பெயர்ந்து மிதுனத் தைப் பொருந்த:—கணிதசாஸ்திரக் கணக்குப்படி பாடலுக்குப்பொருந் திய விஷுவத் அயனஸ்தானத்தைக் கவனிக்கவேண்டும். வேனிற்கால மாகிய நான்குமாதமும் முடிந்து கார்காலம் தொடங்குகிறபடியால் அதற்கு முன்பு நான்கு அயனமாதத்திற் சூரியனிருந்த இடம் விஷு வத் ஸ்தானமாகிறது. கார்கால ஆரம்பத்திற் சூரியன் விஷுவத்தாகிய மேஷாயனத்திலிருந்து 120 துருவாம்சம் 4 ராசி=9 நக்ஷத்திரம் தாண்டிச்சென்றிருக்கிறுன். அப்பொழுது அகத்தியன் உயர்நிலைவிட்டு மிதுனம்சேரலால் விருஷபம் தாண்டி மிதுனமடைந்தது. இவ்வாறு அகத்தியன் 2 ராசி=60 அம்சம் 4½ நக்ஷத்திரம் தாண்டியிருக்கும் சமயமாதலால் விஷுவத்திற்கும் சூரியனுக்கும் இடையில் அகத்தியன் புலப்படும். சித்தாந்தக்கணக்குப்படி அகத்தியனிலிருந்து கார்த்திகை மேற்கே 60 துருவாம்சத்திலும் பூரம் கிழக்கே 54 துருவாம்சத்திலும் உத்திரம் 65 துருவாம்சத்திலுமிருத்தலால் விஷுவத்தாகிய மேஷா யனம் கார்த்திகைதாண்டி எதிர்வந்து பரணியையடைந்தும் சூரியன் பூரத்திற்கும் உத்திரத்திற்கும் மத்தியிலுள்ள ஸ்தானத்தையடைந்தும் இருத்தல்வேண்டும். இது, சுமார் 4,200 வருடங்களுக்குமுன் கலியு காதி ஆரம்பத்திற்குச் சமீபமாகிறது. அயனராசிச் சக்கரம் கார்த்திகை யின் முதலிலிருக்கும்பொழுது அகத்தியன் விருஷபத்தின் இறுதியிலும், அயனராசிச்சக்கரம், கார்த்திகையை விட்டு எதிர்வந்து நாள்சுருக்கிப் பரணியையடையும்பொழுது அகத்தியன் மிதுனத்திலும் தோன்றும்.

எதிர்வரவுமாரி என்பதிலுள்ள விசேஷ சோதிடப்பொருத்தத்தை அறிக. "பின்வரும் மாரி" யென்று உரையெழுதியிருப்பதைக் காட்டிலும்

அது விசேஷமான பதப்பொருத்த முடையது. ஆகையால் இப்பாடல் கூறும் காலத்தில் அயனராசிச் சக்கரமாகிய விஷுவத்குறி, பரணி யின் கடைசியையடைந்தும், சூரியன் பூரத்தைத்தாண்டியும், சந்திரனும் இராகுவும் பூரட்டாதி அல்லது உத்திரட்டாதியை அடைந்தும் இருத் தல் வேண்டும். மகரத்திலிருப்பதாகக் கூறுவதனால் உத்திரட்டாதியை விலக்குகிறது. இது அயனராசி மகரம். வடக்கே வங்காளத்தில் பாத்திர பதத்தில் அகத்தியன் தோற்றத்தைக் கொண்டாடுவதும் இதை ஆதரிக் கிறது. சந்திரன் ராகுவிலிருந்து 7 துருவாம்சத்திலிருக்கும்பொழுது கிரகணம் ஏற்படுவது நிச்சயம். 13½ அம்சத்திற்கப்பால் கிரஹணம் ஏற்படாது. இதனல் இவற்றின் நிலையை நிச்சயம் செய்யவேண்டும்.

மூவகை வீதியுளடங்கிய 27நாட்களுள்:—வராகமிஹிரர் பிரு ஹத்ஸம்ஹிதை 9வது அத்தியாயத்தில், சுக்கிரனுடைய கதியையும் பலனையும் 45 ஸ்லோகங்களால் விரித்துத் தமக்கு முன்னிருந்தவர்கள் 27 நக்ஷத்திரங்களையும் மூன்றுவீதிகளாகப் பிரித்துவழங்கிவந்தனரென் றும், அப்பிரிவில், பரணி முதல் ஒன்பது நக்ஷத்திரம் ஒருவீதியாகவும், பூரம்முதல் ஒன்பது நக்ஷத்திரம் ஒருவீதியாகவும், பூராடம்முதல் 9 நக்ஷத்திரம் ஒரு வீதியாகவும் வழங்கப்பட்டனவென்றும் கூறினர். இம் முறையை “மூவகை வீதியுளடங்கிய 27நாட்களுள்” எனப் பாடலி லும் உரையிலும் குறிப்பிட்டார்கள் போலும். ஆதியில் நான்குமண்டல மாகப் பிரித்திருந்த 28 நக்ஷத்திரங்களை 27 நக்ஷத்திரங்களடங்கிய மூன்றுவீதிகளாக விஷுவத்குறி கார்த்திகையிலிருந்தபொழுது வகுத் தனரென்றும் வேறுவாயிலாகத் தெரியவருகிறது. இதன்படி பாடலிற் சொல்லிய வெள்ளி பூரத்திநாரம்பத்திலும் புதன் பூரத்திலும், செவ்வாய் பூராடத்திலும் வக்கிரமானல் பரணியாரம்பத்திலும் இருத்தல்வேண்டும். ஆனல் வேறொருவிதக் கணக்கும் இருக்கிறது. மேஷவீதி உத்தராய ணம் ரிஷபவீதி பூரணயனம் மிதுனவீதி தெக்ஷிணயனம் என்றும், வைகாசி, ஆனி, ஆடி, ஆவணிமாதங்கள் மேஷவீதி என்றும், புரட்டாசி, ஐப்பசி, பங்குனி, சித்திரைமாதங்கள் ரிஷபவீதி என்றும், கார்த்திகை, மார்கழி, தை, மாசி மாதங்கள் மிதுனவீதி என்றும் வருஷாதிநூலில் அயனவகுப்புச் சொல்லுமிடத்துக் கூறப்பட்டிருக்கிறது. இதன்படி வெள்ளி உத்திரத்தின் இரண்டாம்பாதத்தையும், செவ்வாய் கார்த்திகை யையும் புதன் அனுஷத்தையும் அடைந்திருக்கவேண்டும். இந்தவீதிக்

கணக்கு அயனாம்பம் அசுவினியிலிருந்தகாலத்திற்குப் பொருத்தமா யேற்பட்டதென்று பூராணைனத்திற்குச் சொல்லியிருக்கிற மாதங்களினால் தெரிகிறது. வெள்ளி சூரியனிலிருந்து 10 அம்சத்திற் குள்ளிருக்கும் பொழுது மறைந்துவிடும். 47 அம்சத்திற்குமேற்போகாது. புதன் சூரியனிலிருந்து 14 அம்சத்திற்குள்ளிருக்கும்பொழுது மறைந்து விடும். அதன் சமீபத்திலேயே எப்பொழுதும் இருக்கும். இதற்குப் பொருத்தமான விதிக்கணக்கை வைத்துக்கொள்ளவேண்டும்.

விஷுவத்குறி சகாப்த ஆரம்பத்தில் அசுவினியைத்தாண்டி ரேவதி நக்ஷத்திரம் மூலகிலகாவுக்குச் சமீபத்தை யடைந்தபொழுது சூரியசித் தாந்தத்தில் நக்ஷத்திரங்களைக் கணிப்பதற்காக அதிலிருந்து அளவிட்ட படியால் அதுவே ஸ்திரமான நக்ஷத்திர ராசிச்சக்கர அளவாக ஏற்பட்டு மாறுதலின்றி வழங்கிவருதலைக்கொண்டு அதற்குமுன் பரணி கார்த்திகை ரோகிணி இந்த இடங்களில் விஷுவத் திருந்தபொழுது வழங்கிய ராசிச்சக்கர அளவுகளை மறந்து, இப்பொழுதிருக்கிற நக்ஷத்திர ராசி யளவையே அதற்கு முந்திய காலத்திற்குபயோகிப்பது சரியன்று. ஆத லால் ராசிச்சக்கர அளவை யுபயோகிக்கும்போது அந்தக்காலத் தளவு இப்படியென்று முதலில் யோசித் ததன்படி கணக்கிடல்வேண்டும். மேற் கண்ட நக்ஷத்திரநிலைகளுக்குப் பொருந்திய நக்ஷத்திர ராசிச்சக்கரத்தை யும் எழுதிப்பார்க்கலாம்.

புலர்விடியலங்கியுயர்சிறப்ப என்பது பாடல். "கார்த்திகையுச்ச மாக விடிதலுண்டாக" என்பது உரை. கார்த்திகை உச்சமாகும்பொழுது கிழக்கே கீழ்வானத்திற் சற்றுவடக்கில்தள்ளி மகம் உதிக்கும். அவ் விடத்திற் சூரியன் இருந்தால் அகத்தியன் புலப்படாது. சித்தாந்தக் கணக்குப்படி அக்கினிநக்ஷத்திரம் உச்சமாகும்பொழுது கிழக்கே பூரம் உதிக்கும். அகஸ்வித்தியாசத்தை உத்தேசித்துக் கிழக்கே உத்திரம் உதிப்பதாகவும் வைத்துக்கொள்ளலாம். அதிலிருந்து 20 துருவாம் சத்துக்குக் கீழே ஹஸ்தம் இருக்குமென்றால் வராஹமிஹிரர்காலத்தில் (560 A. D.) சிம்மராசியில் 24-வது துருவாம்சத்தைச் சூரியனடையும் பொழுது உஜ்ஜயினியில் அகத்தியன்தோற்ற ஆரம்பிக்குமென்றும், மற்றவர்களிற் கொஞ்சம் வித்தியாசப்படுமென்றும் கூறியிருத்தலால், சூரியன் ஹஸ்தத்தை யடைவதற்குச் சற்றுமுன்பே தென்னாட்டில் அகத்தியன் தோன்றக்கூடும். அக்கினி நக்ஷத்திரம் 5,500 வருஷங்

களுக்குமுன் விஷுவத்குறிக்குச் சமீபத்தில் ஸ்வர்க்கத்வாரம் என்ற பெயருடன் பிரசித்திபெற்றிருந்ததென்று தெரிகிறது. ஆகையால், பாடலிற் கூறிய அக்கினிநக்ஷத்திரம் பொருத்தமுள்ளதாகவும் சமீபத்தி லெழுதிய வுரையிற்கூறிய கார்த்திகை பொருத்தமற்றதாகவும் இருப்பது கவனிக்கத்தக்கது.

உரையின்படி கார்த்திகையை உச்சமாகவைத்துப் பொருத்தினல் "புலர்விடியல்" என்பது சூரியோதயத்துக்குச் சுமார் மூன்று நாழிகை முன்னதாகும். அல்லது நக்ஷத்திர ஆரம்பத்தை உயர்நிலையாக ஒரு வாறு வைத்துக்கொண்டால் அக்கினியை அதிபதியாகவுடைய கார்த்தி கையைச் சொல்லலாம்.

ஆகாசகங்கையென்ற சாயபாதம் அல்லது சோமதாரை முடிகிற தெற்குக்கோடிக்குச் சமீபத்திலுள்ள அகத்தியன் கார்காலத்தை ஆரம் பித்துச் சையமலைக்கண் செல்லும்பொழுது ஆகாசகங்கை அம்மலையில் இறங்கி வைகைவழியாகச் செல்வதுபோல் தோற்றும்.

அகத்தியன்தோன்றும் தென்கிழக்குத் திசையைநோக்கி அந்த ணன் அர்க்கியங்கொடுக்கும்பொழுது இடைகலையிற் சந்திரனும் பிங்கலை யிற் சூரியனும், பிரும்மரந்திரத்தில் அக்கினியும்தோன்ற அங்குட்ட அகத்தியன் ஹிருதயஸ்தானவுயரத்தில் உதிப்பது யோகசாஸ்திர விசேஷத்தையும் காட்டுகிறது.

இவ்விஷயத்தில் விரித்துரைத்தல் அவசியமாயினும் பாடலிற் கண்ட மற்ற விஷயங்களைப்பற்றி இவ்வாறெழுதின் மிகவும் விரியுமாகை யால் முக்கியமானவிஷயங்களைமட்டும் மேலே எடுத்துக்காட்டினேன். தமிழ்ப்பாடலுக்கும் வடமொழிச்சாத்திரங்களுக்கும் உள்ள ஒற்றுமை இப்பாடலால் நன்கு விளங்குகின்றது.

இங்ஙனம் எழுதினேன், கன்யாரவிமாத இறுதியில் துலாயனமாத முதலில் புதனும், குருவும், சனியும், ராகுவும் ஒரு வீட்டிலிருக்க ரேவதி நக்ஷத்திரக்ரஹணங் கூடியதினத்தில், தென்காசி, மதுரை வாசியாகிய,

ராம. கணபதி ஐயர் **B.A., B.L.,**

ஹைக்கோர்ட்டு வக்கீல்.

[குறிப்பு:—ஐரோப்பிய சாஸ்திரத்தில், கனேபஸ் (Canopus) என் னும் நக்ஷத்திரத்துக்குக் கொடுத்திருக்கும் அளவைத் திருவையாற்றுப் பஞ்சாங்கத்தில் அகத்தியனுக்கு உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்து சாஸ்திர ஆராய்ச்சிசெய்த கோல்புருக் (Colebrooke) துரை இவ் விரண்டுநக்ஷத்திரமும் ஒன்றென்றனர். சூரியசித்தாந்த அளவுப்படி ஒருநக்ஷத்திர அளவு வித்தியாசமாகிறது.—R. G.]

---

௨

# பதினொன்ரும்பரிபாடற் காலநிர்ணயம்.*

பரிபாடல் என்பது பலவாசிரியரால் இயற்றப்பட்ட சுமார் 70 பாடல்களடங்கியது. அவற்றுள் தமக்குக்கிடைத்த 22 பாடல்கள் மட்டும் பரிமேலழகர் உரையுடன், மஹாமஹோபாத்யாய உ.வே. சாமிநாதையாவர்களாற் பிரசுரம் செய்யப்பட்டுள்ளன. இவற்றுள், நல்லந்துவனார், தாம்பாடிய 6, 11, 20-ம் பாடல்களில் வைகையாற்றைப்பற்றி வர்ணித்திருக்கின்ருர். அவற்றுள்,

> "விரிகதிர் மதியமொடு வியல்விசும்பு புணர்ப்ப
> வெரிசடை யெழில்வேழந் தலையெனக் கீழிருந்து
> தெருவிடைப் படுத்தமூன் ரொன்பதிற் றிருக்கையுள்
> உருகெழு வெள்ளிவந் தேற்றியல் சேர
> வருடையைப் படிமகன் வாய்ப்பப் பொருடெரி
> புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடிய
> லங்கி யுயர்நிற்ப வந்தணன் பங்குவி
> னில்லத் துணைக்குப்பா லெய்த விறையமன்
> வில்லிற் கடைமகர மேவப்பாம் பொல்லை
> மதிய மறைய வருநாளில் வாய்ந்த
> பொதியின் முனிவன் புரைவரைக் கீறி
> மிதுன மடைய விரிகதிர் வேனி
> லெதிர்வரவு மாரி யியைகென விவ்வாற்ருற்
> புரைகெழு சையம் பொழிமழை தாழ
> நெரிதரூஉம் வையைப் புனல்"

என்ற 11ம் பாடலின் முதல் பதினான்குவரிகளில் அவ்வர்ணனைக் காலத்தைக் குறிக்கத்தக்க சில குறிப்புக்க ளடங்கியிருக்கின்றன. இப்பாடலில், மகரத்திற் சனியும், மீனத்தில் வியாழனும், மேஷத்திற் செவ்வாயும், விருஷபத்திற் சுக்ரனும், மிதுனத்திற் புதனும் நிலவும் சந்திரக்கிரஹணமும் இருந்ததாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இந்து க்ரஹநிலைகளைக்

---

* இது மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் இருபதாம் வருடக் கூட்டத்திற் பேசப்பட்டது.

கூறிய ஆசிரியர், சூரிய சந்திரர் இருப்பிடத்தைப்பற்றிக் கூறவில்லே. ஒருவேளே சிலவரிகள் காணுமற்போயுமிருக்கலாம். புத—சுக்ரர் நிலேயைக் கொண்டு சூரியன் நிலேயையும், இம்மூவர்நிலேயைக்கொண்டு சந்திரன் நிலேயையும், நிரூபிக்கவேண்டும்.

## புதன்.

வானசாஸ்த்ரப்படி, புதனுக்கும் சூரியனுக்குமுள்ள தூரம் 28 பாகை (Degree) க்குமே லிருக்கமுடியாது. புதன் மிதுன ($61^0$ முதல் $90^0$வரை) ராசியிலிருப்பதால், சூரியன், ($61^0-28^0=$) 33-ம் பாகைக்கப்பால், ($90^0+28^0=$) 118-ம் பாகைக்கிப்பால் இருக்கவேண்டும். அதாவது, இப்பாடல்தினம், வைகாசிமீ 3ம் தேதிமுதல் ஆடிமீ 28ம்தேதிக்குள் ஏதாவதொருதினமாயிருக்கவேண்டும்.

## சுக்ரன்.

விருஷபராசி ($31^0$முதல் $60^0$வரை)

சுக்ரனுக்கும் சூரியனுக்குமுள்ளதூரம் 48 பாகைக்குமே லிருக்கமுடியாது. சுக்ரன் விருஷபராசியிலிருப்பதால், சூரியன் ($60^0+48^0=$) $108^0$ பாகைக்குள் இருக்கவேண்டும். அதாவது, சுக்ரரீதியாய்க் கணக்கிடுவோமாகில், இப்பாடல்தினம், ஆடிமாஸம் 18 தேதிக்குள் ஒருதினமாயிருக்கவேண்டும்.

## புதன்—சுக்ரன்.

இவ்விருவர்நிலேயினின்றும் கணக்கிடுவோமாகில், வானசாஸ்திரப்படி, இப்பாடல்தினம் ஆடிமாஸம் 18-ம் தேதிக்கப்பால் இருக்கமுடியாதென விளங்கும்.

## அகஸ்திய நக்ஷத்ரம்.

(73-ம் அம்சம்)

போதியின் முனிவன் புரைவரைக்கீறி மிதுனமடைய=

(1) அகஸ்திய நக்ஷத்ரம் தனது இருப்பிடமாகிய அஸ்தவரை கடந்து மிதுனராசியுடன் உதயமாக,

அல்லது,

(2) அகஸ்தியர் (புரைவரை) மலையாகிய அஸ்தகிரிகடந்து, மிதுன ராசி உதயமாக. [புரை=இருப்பிடம்]

இவற்றுள், மிதுனராசி உதயமாக என்பதைக்காட்டிலும் மிதுன மத்தியிலுள்ள அகஸ்திய நக்ஷத்ர ($73^{0}$) மே உதயமாயிற்று என்று சொல்லுவது மிகப் பொருத்தமாயிருக்கும். சந்திரனுள்பட ஆறு க்ரஹங்களும், அகஸ்தியநக்ஷத்ரமும், கார்த்திகைநக்ஷத்ரமும், ஆகாயத்திற் புலப்படுவதாகக் கவி வர்ணித்திருப்பதால், இன்னும் சூரியோதயமாக வில்லையென்பது நன்குவிளங்கும். 'அகஸ்தியம் உச்சங்கடந்து அஸ்தமனமாக' என்பதும் பொருந்தமாட்டாது.

## அருணோதயம்.
## (Dawn)

சூரியோதயத்துக்கு (முன் 18 பாகையில்) சுமார் 3 நாழிகைக்கு முன் அருணோதயமாகின்றதென்றும், அருணோதயமானவுடனேயே, ஆகாயத்திலுள்ளநக்ஷத்திரங்கள் மறைகின்றனவென்றும், வானநூலோர் கூறுகின்றனர். ஆதலால், அகஸ்த்ய நக்ஷத்ர (73-ம் பாகை) த்திலிருந்து 18 பாகை ($73^{0}+18^{0}=91^{0}$) க் கப்பாற் சூரியோதயமாகவேண்டுமென்றும், சூரியோதயத்துக்கு இன்னும் 3 நாழிகைக்குமேலிருக்கின்றது என்றும் விளங்கும்.

இதனால், இப்பாடல் தினம், ஆடிமீ முதல்தினத்துக்குமுன்னிருக்கமுடியாதென விளங்கும்.

புத—சுக்ர—அகஸ்தியநிலைகளைக்கொண்டு கணக்கிடுவோமாகில், இப்பாடல்தினம் ஆடிமாஸத்தில் 18 தேதிக்குள்ளிருக்கவேண்டுமென்று விளங்குகின்றது.

## சந்திரன்.

பாம்பொல்லை மதியம் மறைய—சந்திர க்ரகண முண்டாக. இதனால், அன்று பௌர்ணிமி என்றும், சந்திரன் சூரியனுக்கு 7-ம் இடமான மகரராசியில் முதல் 18 பாகைக்குள் உத்திராடம் அல்லது திருவோண நக்ஷத்திரத்திலிருக்கவேண்டுமென்றும் ஏற்படுகின்றது.

மேறும் இவ்வடிக்கு, 'சந்திரன் கிரஸ்தாஸ்தமனமாக' என்றும் கூற லாம். சந்திரக்ரஹணமேயில்லை, சந்திரன் அஸ்தவரையடைந்தான் என்பதுமாத்திரம் தகுமென்று சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள்.

[பாம்பு=ஆயில்யம், கரை, வரம்பு. ஒல்=முடிவிடம். ஒல்கல்= அருகல், தளர்தல், குறைதல். ஒல்லை=காலவரை.]

காலநிர்ணயம்.

| வி | செ | சு | (ல) 4 |
|---|---|---|---|
| | ராசி சக்கரம். | | சூ கேது |
| சனி சந் ராகு | | | |
| | | | |

105°

இவ்வாறு க்ரகநிலைகளும், பூர்ணிமையும், சந்த்ரக்ரஹணமும் ஆடி மாதம், 18உ க்குள் பொருந்திய வருஷமே, இச்செய்யுளிற் கூறப்பட்ட ஆண்டெனக் கூறலாம்.

= கி. பி. 372 = விக்ரம 429 = ஆங்கிரஸ ஹூ
= கலி 3473 = சகம் 294 ஆடிமாஸம் 15உ.

இவ்வம்சங்கள் யாவும் பொருந்தியிருப்பதாய்த் தெரியவருகின்றது.

ஆனல், இவ்விஷயமும், இன்னும் எவ்வெவ்வாண்டுகளில், இவ்வம் சங்கள் யாவும் ஒருங்கே, துல்யமாய்ப் பொருந்தியிருக்கின்றனவென் பதும், அறிஞர் பலரால் ஆராய்ச்சி செய்யத்தக்கன.

கார்காலம்.

வேனில் எதிர்வரவு மாரி இயைக= வேனிற்காலம்போய்க் கார்காலம்வர, என்பதால், வர்ஷரிது ஆரம்பமான ஆவணிமாதம் என் றல்லவோ ஏற்படும். ஆடிமாதம் என்பது எப்படித் தகும்?

(1) முன்னொருகாலத்தில் 4 ரிதுக்களாய் வழங்கிவந்தார்கள் என்பதும், அம்முறையில் 4-ம் மாதமான ஆடிமாஸம் வர்ஷரிது தொடங்கலாம் என்பதும், சாதுர்மாஸ்யம் என்பது இவ்வழக்கைத்தான் குறிக்கின்றதென்பதும் சிலர்கொள்கை.

(2) ஆடிப்பூர்ணிமை யென்பது சாந்திரமானப்படி, ஆடி அமாவாஸைக்கு முற்பட்டால், வங்காளத்தில் ஶ்ராவண (ஆவணி) பூர்ணிமையென்றும், தக்ஷிணத்தில் ஆஷாடபூர்ணிமையென்றும் வழங்குகின்றனர்.

(3) மேலும், வேதாங்கஜோதிஷகாலம் (கி. மு. 2000) முதல், வராஹமிஹிரர்காலம் (கி. பி. 520) வரை, சாந்திரமானமும், கார்த்திகாதி கணனமுமே வழங்கிவந்தபடியால், வராஹமிஹிரர்காலத்துக்கு முற்பட்ட 372ல் எழுதிய ஆசிரியர் சாந்திரமான முறையையனுசரித்து, எழுதியிருக்கலாம்.

(4) ஆடிமாஸச்சாரல் (1st monsoon)ம், 18 ம் பெருக்கும் இவற்றுடன் கவனிக்கத்தக்கவை.

## அங்கி.

புலர் விடிய லங்கி உயர்நிற்ப = விடியும்போது அங்கி உச்சத்திலிருக்க.

அங்கி = (1) அக்கினியைத் தேவதையாகவுடையகார்த்திகை நக்ஷத்திரம் (அசுவினாதி 33ம் அம்சம்).

= (2) அக்கி நக்ஷத்ரம், (58°)

புலர் விடியல் = (1) சூரியோதயம் (Sun rise)—உரையாசிரியர்;

(2) அருணோதயம் (Dawn).

கார்த்திகை நக்ஷத்ரம் (33ம் அம்சம்) உச்சத்திலிருக்க (33 + 90 =) 123ம் அம்சத்தில் அன்று சூரியோதயம் என்பதும், அது, ஆவணிமீ 3ம் தேதியைக் குறிக்கும் என்பதும் உரையாசிரியர் கொள்கை. செய்யுட்காலம் ஆடிமீ 18ம் தேதிக்கப்பால் இருக்கமுடியாதென்று முன்னமேயே நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால், அங்கி உயர்நிற்ப =

கார்த்திகை ($33^0$) அல்லது அக்னி ($58^0$), அடிவானங்கடந்து மேலே வந்திருக்க, என்பதுதான், பொருந்தும்.

## விஷுதினம்.

## (Vernal Equinox)

பொதியின்முனிவன் (அகஸ்த்ய நக்ஷத்ரம்) என்பது சைத்ர விஷு தினத்தைக் குறிக்கலாம் என்று கணிதசாஸ்திர பீ. ஏ. பட்டதாரி யொருவர் கூறுகின்றார்.

ராசிமண்டலத்தில், அகஸ்திய நக்ஷத்ரம், அச்விநுதி 73ம் பாகை யில், என்றும், ஸ்திரமாயுள்ளது. அதற்கும், அச்வதிக்குமுள்ள தூரம் என்றும் மாறாது.

உத்தராயணத்தில், சூரியன், பூமத்யரேகையைத் தாண்டும் ஸம-அஹோ-ராத்ர தினமே விஷுதின மெனப்படும்.

அந்தத்தினம் ஸ்திரமானதுமல்ல, நக்ஷத்திரமுமல்ல. அப்படிப் பட்ட சைத்ரவிஷு, 72 வருஷங்களுக்கொருநாள் பின்னடைந்தே வரு கின்றது. வேதாங்கஜோதிஷகால (2000 கி. மு.) த்தில் ($33^0$) வைகாசி மீ 3௨ யிலும், வராஹமிஹிரர்கால (கி. பி. 520) த்தில் (அச் விநுதி $=0^0$ )சித்திரை முதல்தேதியிலும், இப்போது ($338^0$) பங்குனி 9ம் தேதியிலும் ஷை விஷுதினம் அமைந்துவந்திருக்கின்றது. அப் படி யிருக்க, ஸ்திரமான அகஸ்திய நக்ஷத்ரத்தைச் சரமான விஷுதின மென்பது பொருந்துமா?

## கார்த்திகாதிகணனம்.

'எரிசடை இருக்கை' என்பதற்கு, 'மேட—இடப—மிதுன வீதி களாய் $3 \times 9$ நக்ஷத்திரங்களமைந்திருக்க' என்று உரையாசிரியர் பொருள் கூறுகிறார்.

எரிசடை = அக்னி சிகை = கார்த்திகை
வேழம் = பரணி
இருக்கை = ரிக்ஷம் = நக்ஷத்ரம்,

'கார்த்திகைமுதல் பரணி ஈறுகவுள்ள 27 நக்ஷத்ரங்களுமமைந்த வானவீதியில்', என்பது மிகப் பொருந்தும். வேதாங்கஜோதிஷகாலம்

(2000 கி. மு.) முதல் வராஹமிஹிரர்காலம் (520 கி. பி.) வரை கிருத்திகாதிகணனமே வழங்கிவந்ததென்றும், பிறகுதான் அஶ்விநிதிகணனம் வழக்கில்வந்ததென்றும் அறிகிறோம். இந்நூலாசிரியரும் ஷெ கிருத்திகாதிகணனத்தை யனுசரித்தே வர்ணித்திருப்பதால், இப்பாடற்காலம், வராஹமிஹிரர்கால (520 கி. பி.) த்துக்கு முற்பட்டகாலமென விளங்கும்.

## முடிவு.

முற்கூறியவற்றால், இப்பாடற்காலமானது, ஆடிமாஸம், 18உக்குள் வரும் பூர்ணிமை, க்ரகணதினம், இரவு நான்காம் யாமம் என்று நிர்ணயமாகின்றது.

ஆனால், கி. பி. 372ம் ஞு ஆடிமீ 15ம் உ என்பது உத்தேசமா (Hypothesis) யத்தான் சொல்லப்பட்டிருக்கிறது.

இன்னும் வேறுவருஷத்தில், வேறுதினங்களிலும் பொருந்துமா என்பது அறிஞர்பலரால் ஆராய்ச்சிசெய்யத்தக்கது.

ஆர். எஸ். நாராயணஸ்வாமி ஐயர் பி.ஏ., பி.எல்.,
மதுரை.

---

உ

மதுரைத்தமிழ்ச்சங்கம்.

# தனித்தமிழ்ப்பரீக்ஷைவினா.

## பிரவேசபண்டிதவகுப்பு.

பரீக்ஷகர்:—இ. வை. அனந்தராமையர்.

## இலக்கணம் I.

ரௌத்திரிஞு பங்குனிமீ 22உ (4-4-21) திங்கட்கிழமை 10—1.
(அம்சம் 60.)

I. (1) நன்னூலென்பது எதற்கு உதாரணமாகக் காட்டப்பெற்றுள்ளது?

(2) அதிகாரமென்பதற்கு விருத்தியிற்காணப்படும் விசேடவுரையென்ன?

(3) காண்டிகைக்கும் விருத்திக்கும் முறையே கூறப்பட்டுள்ள இலக்கண மென்னை ?

II. (1) 'மொழிமுதற்காரணமாமணுத்திரளொலியெழுத்து' என்புழி விருத்திகாரர்கூறிய உரைவிசேடம் யாது ?

(2) உயிர்க்கிடக்கை முறைக்குக் கூறப்பட்ட காரணத்தை எழுதுக.

(3) பிறப்பிலக்கணத்தில் கஙக்களோடு ஒத்தமுயற்சியையுடையதாகக்கூறப்பட்டுள்ள எழுத்து யாது ?

(4) மா, ஆம், மடு, மாடு, கேண்மியா என்பவைகள் முறையே எத்தனையெத்தனை மாத்திரையுடையன ?

III. (1) 'இவைசிலவில' என்றதனுல் உரையிற்கொண்ட வினையிடைநிலைகள் எவை ?

(2) ஒருவன், கூனன், காரான், சேர்ப்பன் இப்பெயர்கள் முறையே பொருண்முதலாறனுள் எது எது அடியாகப் பிறந்தன ?

(3) தன்வினைப்பகுதிகள் எவ்வெவ்வகையாற் பிறவினைப்பகுதிகளாகும்? ஒவ்வொரு வகைக்கும் ஒவ்வோருதாரணம் எழுதுக.

(4) உண்ணுன், செய்யான் இவற்றிற் கெட்டது எதிர்மறை ஆகாரமா ? விகுதிமுதலாகாரமா ? ஆக்ஷேப சமாதானங்களால் விளக்குக.

(5) ஈறுபோதலென்னும் சூத்திரம் என்ன உத்தி ?

IV. (1) 'மூன்றுறுருபெண்' என்னுஞ்சூத்திரத்திற்குத் தெளிவாக உரை எழுதுக.

(2) அல்+திணை, அவ்+நல்லன, ஆல்+நன்று இவற்றை விதி காட்டிப் புணர்க்க.

(3) சாரியையில் எழுத்துச்சாரியை பதச்சாரியையென இருவகை யுண்டென்பது எதனுல் தெரிகின்றது ?

V. (1) குறிப்புசசொற்கள் எவை?

(2) 'ஆறனுருபுமேற்குமவ்வுருபே' என்பதற்கு, பிறர்கூறிய பொருள் யாது? அதனை விருத்திகாரர் எங்ஙனம் மறுத்தார்?

(3) 'இம்முப்பெயர்க்கண்', 'இறுதிநிலவியவைந்துமப்பொருண் மையினேர்ப' இவற்றில் முப்பெயர் எவை? ஐந்து எவை?

VI. (1) 'ஆறுந்தருவதுவினையே' என்னுமிடத்து, 'கொடிதுஞ்சும்' என்பது எதற்கும் எதற்கும் உதாரணமாகக் காட்டப்பட்டிருக்கிறது?

(2) 'ஐந்தொன்றாறுமுக்காலமுமுறைதரும்' ஆறு எவை? அவை தருங்காலம் யாது?

(3) தன்மை முன்னிலை யிடங்கட்குரிய பால்கள் எவை?

(4) யாரென்வினாவினைக்குறிப்பு உயர்முப்பாலைக் கடந்துவருதற்கு மேற்கோளும் சமாதானமும் எழுதுக.

VII. (1) இடைச்சொல்லின் எண்பகுதிகளுள் இடையியலில் எவ்வெப் பகுதிகள் கூறப்பெறுகின்றன?

(2) 'இந்நான்கென்னுமஃதின்றியுமியலும்' இதில் நான்கென்றது எவற்றை? அஃதென்றது எதனை?

(3) சிறப்பும்மை எச்சவும்மைகளை உதாரணங்காட்டி விளக்குக.

VIII. (1) உரிச்சொல்லின் பொதுவிலக்கணம் யாது? ஆக்ஷேப சமாதானங்களுடன் எழுதுக.

(2) 'முரணந்தாதி' இதனைப் பதம்பிரிக்க.

(3) 'இனையவுடல்கொளுயிர்க்குணம்' இனைய என்றதனாற் கொள்ளப்படுவன எவை?

(4) கடியென்னும் உரிச்சொல்லுக்குள்ள பொருள்களுள் எந்த நான்கிற்கேனும் உங்கள் இலக்கியபாடத்தில் உதாரணங் காட்டிப் பொருளும் எழுதி அப்பாடலின் இடத்தையும் குறிக்க.

IX. குன்றக்கூறல் சுருங்கச்சொல்லல்களுக்கும், கெடுதல் தொகுத்தல் மூவழிக்குறைதல்களுக்கும், முன்னிலைவினை ஏவல்வினைகளுக்கும், ஏவல்வினை வியங்கோள்வினைகளுக்கும், பெயர்ப்பகுபதம் குறிப்புவினைப்பகுபதம் குறிப்புவினையாலணையும்பெயர்ப்பகுபதங்களுக்கும், இசைநிறை அசைநிலைகளுக்கும், பொச்சாப்பு மறவிகளுக்கு முள்ள வேறுபாடுகளை விளக்குக.

---

# புத்தகமதிப்புரை.

I. மஹரிஷிகள் சரித்திரம்:-பெரியகுளம் வக்கீல் ஸ்ரீமத். M. R. ஸ்ரீநிவாஸையரவர்கள், புராணம், இதிகாசம், காவியம் முதலியவற்றிலிருந்து மஹரிஷிகளின்பெயர்களைத் தொகுத்து அகராதிவரிசைப்படுத்தி அவர்கள் சரித்திரங்களை எளியநடையில் விளக்கிச் சிறுசிறு பகுதிகளாக வெளியிட்டுவருகிறார்கள். பகுதி ஒன்றுக்கு 50 பக்கமாக இதுவரை நான்கு பகுதிகள் வெளியிடப்பட்டுள்ளன. இந்நூல் 16 பகுதிகளில் முடியுமென்று தெரிகிறது. வெளிவந்துள்ள நான்குபகுதிகளில் உயிர்வருக்கமும் ககரவர்க்கமும் முடிந்துள்ளன. இம்முறையே இந்நூல் முழுதும் வெளிவந்தால் உலகுக்கு மிகவும் பயன்படும். இது ஆங்கிலநூல்வல்லாரது ஆராய்ச்சிமுறையிற் புதிதாய் எழுதப்பட்டுள்ளது. படிப்பவர்க்கு நீதி, அறிவு நல்லொழுக்கம் முதலியவற்றை விருத்திசெய்யக்கூடியது. கலாசாலை மாணவர்க்குப்பாடமாகும் தகுதியுடையது. இதன் விலை தனிப்பகுதி ரூ 0-10-0. நான்குபகுதியும் சேர்ந்து ரூ 2-2-0. கலாசாலை யதிகாரிகளும், பிரபுக்களும், பிறரும் இதை மாணவர்க்குப் பாடமாக்கியும், பொருளுதவியும், வாங்கியும் ஆதரித்து ஐயாவர்களுக்கு இம்முயற்சியில் மேன்மேலும் ஊக்கமுண்டாக்குவார்களென்று நம்புகிறோம்.

II. செய்யுட்பாடக்கோவை:—(இரண்டாம்பாகம் தொளாயிரம் பாடல்களடங்கியது.) இது, மதுரை ஸௌராஷ்டிர உயர்தரகலாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். P. C. புன்னைவனநாதமுதலியாரவர்களால் தொகுக்கப்பெற்றது. இதில் அந்தாதி, கலம்பகம், பிள்ளைத் தமிழ், கோவை, சதகம் முதலிய பிரபந்தங்களிலிருந்தும், நீதிநூல், புராணம் முதலியவற்றிலிருந்தும் செய்யுள்கள் தேர்ந்தெடுத்துச் சேர்

கப்பட்டுள்ளன. இதிற் றெடுக்கப்பட்ட செய்யுட்களுக்கு இறுதியிற் குறிப்புரையும் எழுதிச்சேர்க்கப்பட்டிருக்கிறது. இது தனித்தமிழ் பயிலத்தொடங்குவார்க்கும் ஆங்கிலகலாசாலை மாணவர்க்கும் பயன்படத் தக்கது. பெயாளவில் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்பட்ட பலநூல்களின் நயமும் நூலாசிரியர்திறமும் ஒருங்கே கண்டுகளித்தற்கு இந்நூல் கருவியாகும். இதன் விலை ரூபா 1–4–0. இது, மதுரை புதுமண்டபம் புத்தகவியாபாரி ஸ்ரீமத். பி. நா. சிதம்பரமுதலியாரவர் களாற் பதிப்பிக்கப்பட்டது. வேண்டுவோர் அவர்க்கு எழுதிப்பெறலாம்.

III. கம்பராமாயணச்சுருக்கம்:-இது,சென்னை வி. குமாரசுவாமி நாயுடு கம்பெனியாரால் வெளியிடப்பட்டது. இது, கம்பராமாயணத் தைத் தழுவி இடையிடையே செய்யுள்விரவிவரச் செவ்வியநடையில் எழுதப்பட்டிருக்கிறது. இதிற் பாலகாண்டமும் அயோத்தியாகாண்ட மும் தனித்தனி புத்தகமாக நல்லகடிதத்திற் றிருத்தமாயும் அழகாயும் அச்சிடப்பட்டுள்ளன. இவற்றுள், பாலகாண்டம் துரைத்தனத்தாரால் போதனாமுறைபயில்வார்க்குப் பாடமாக வைக்கப்பட்டதென்று தெரி கிறது. இப்புத்தகங்கள் மாணாக்கர்க்கு வியாசம் எழுதுந்திறத்தை விருத்திசெய்யவல்லதாயிருப்பதால் துரைத்தனத்தாரும் கலாசாலை யதிகாரிகளும் இவற்றை ஆதரித்து மாணவர்க்குப் பாடபுத்தகமாக ஏற்படுத்துவார்களென்று நம்புகிறோம். விலை பாலகாண்டத்துக்கு ரூ 0-10-0. அயோத்தியாகாண்டத்துக்கு ரூ 0-14-0. வேண்டுவோர்,சென்னை வி. குமாரசுவாமிநாயுடு கம்பெனியார்க்கு எழுதிப்பெறலாம்.

IV. தபாலாபீஸ்:—இது, கும்பகோணம் துரைத்தனக் கல்லூ ரிப் போதகாசிரியர் ஸ்ரீமத். K. C. வீரராகவையர் M.A., அவர்களால், வங்காளவாசியும், கவிதாசிரோமணியுமான ஸர் ரவீந்திரநாத டாகூர் என்ப வர் இயற்றிய தபாலாபீஸ் என்னும் நாடகத்தை முதனூலாகக்கொண்டு இனியநடையில் முதனூலின் அபிப்பிராயம் நன்கு புலனாகும் வண்ணம் மொழிபெயர்க்கப்பட்டு நல்லகடிதத்திற் றிருத்தமாய் அச்சிடப்பட்டிருக் கிறது. இது, ஆன்மாவின் நிலையையும் அதற்கு ஏற்படும் பந்தங்களை யும், அது பந்தமறுத்து விடெய்து நெறியையும் உள்ளுறைப்பொரு ளால் நன்குவிளக்குவது. வேண்டுவோர் ஆக்கியோர்க்கெழுதிப்பெறலாம்.

பத்திராதிபர்.

---

பிரசமுண்டு வரிபாடுந் தண்டலையார் வளநாட்டிற் பெண்க ளோடு
சரசமுண்டு போகமுண்டு சங்கீத முண்டுசுகந் தானே யுண்டிங்
குரைசிறந்தவறுமையுண்டோவிடக்கமுண்டோவொன்றுமில்லையுலகுக்கெல்லா
மரிசியுண்டேல் வரிசையுண்டா மக்காளுண் டாகின்மச்சா னன்புண் டாமே. (62)

'அக்காளுண்டானல் மச்சானுறவுண்டு' என்பது பழமொழி.

தத்தைமொழி யுமைசேருந் தண்டலையார் பொன்னிவளந் தழைத்த நாட்டில்
வித்தகமந் திரியில்லாச் சபைதனிலே நீதியில்லை வேந்தர்க் கெல்லாம்
புத்திநெறி நீதிசொல்லு மந்திரியல் லாதொருவர் போதிப் பாரோ
நித்தலுமுண் சோற்றின்முழுப் பூசனிக்காய் மறைத்ததுவு நிசம தாமே. (63)

'முழுப்பூசனிக்காயைச் சோற்றின்மறைத்தானென்றதுபோலிருக்கிறது' என்ப துலகர் பழமொழி.

நேசமுடன் சபையில்வந்தால் வேளையறிந் திங்கிதமா நிருபர் முன்னே
பேசுவதே யுசிதமல்லா னடுவிலொரு வன்குழறிப் பேச லெல்லாம்
வாசமிகுந் தண்டலைநீ ணெறியாரே யபிடேக மலிநீ ராட்டிப்
பூசைபண்ணும் வேளையிலே காடியைவிட் டோட்டுவது போலுந் தானே. (64)

'சிவபூசைபண்ணும்வேளையிலே காடியைவிட்டேவினதுபோலிருக்கிறது' என்பது பழமொழி.

மண்ணுலகிற் பிறர்குடியை வஞ்சனையிற் கெடுப்பதற்கு மனதி னாலே
யுன்னிடினு முரைத்திடினு மவன்றானே கெடுவனென்ப துண்மை யன்றோ
தென்னவன்சோ ழன்பணியுந் தண்டலைநீ ணெறியாரே தெரிந்து செய்யுந்
தன்வினைதன் னைச்சுடவோட் டப்பம்வீட் டைச்சுடவுந் தான்கண் டோமே.(65)

ஓட்டப்பம் வீட்டைச்சுட்டவரலாறு:—பட்டினத்தடிகள், தாம் துறவுபூண்டு மௌனமடைந்திருந்ததைக்கண்டு பொறுளாகிய தம் முன்பிறந்தவள் நஞ்சுகலந்த அப்பத்தைத் தமக்குக் கொடுக்க அதனை யறிந்துவாங்கி அவள்வீட்டின்மேற் சொருகிவைத்தார். அது அவள்வீட்டைச் சுட்டெரித்துவிட்டது. உடனே பட்டினத்தடிகள் 'தன்வினை தன்னைச்சுட ஓட்டப்பம் வீட்டைச் சுட்டது' எனக் கூறினர். இது பழமொழியாகப் பின் வழங்கிவரப்பட்டது.

முன்பெரியோர் தொண்டுபட்டு நடந்தவழி தனைப்பழித்து மூடனே பேசிப்
பின்பலரை யுடன்கூட்டி நூதனமா நடத்துவது பிழைபா டெய்திற்
றுன்பறியாக் கதியருளுந் தண்டலைநீ ணெறியாரே தூய ளாகி
யன்புளதா யைப்பழித்து மகளேதோ செயத்தொடங்கு மறிவு தானே. (66)

'தாயைப் பழித்து மகள் அவிசாரியாடினதுபோல்' என்பது பழமொழி.

தண்ணமரு மலர்ச்சோலைத் தண்டலைநீ ணெறியேநின் றன்னைப் பாடி
வெண்ணமிக விம்மையிலு மறுமையிலும் வேண்டியதுண் டிதையோ ராமன்
மண்ணின்மிசை நாத்துதிகள் பண்ணியலைந் தேதிரிபா வாண ரெல்லாம்
வெண்ணெய்தம திடத்திருக்க நெய்தேடிக் கொண்டலையும் வீணர் தாமே. (67)

'வெண்ணெயிருக்க நெய்க்கலைவதுபோலிருக்கிறது' என்பது பழமொழி.

அந்தணர்க்குத் துணைவேத மாசருக்குத் துணைவயவா ளவனி மீது
மைந்தருக்குத் துணைதாயர் தூதருக்குத் துணைமதுர வார்த்தை யன்றோ
சுந்தமர்க்குத் துணையான தண்டலைநீ ணெறியாரே நண்பான
சுந்தரர்க்குத் துணைநாளு மேழையர்க்குத் தெய்வமே துணையென் பாரே. (68)

'ஏழைக்குத் தெய்வமே துணை' என்பது பழமொழி.

போரஞ்சா ரதிவீரர் பொருளஞ்சார் விதாணஞ்சேர் புருடர் தோயு
நீரஞ்சார் மறைமுனிவர் நெருப்பஞ்சார் கற்புடைய நிறைசேர் மின்னார்
வாரஞ்சா முலையிடஞ்சேர் தண்டலையா ரேசொன்னேன் மதமா வென்னுங்
காரஞ்சா தினஞ்சிங்கங் கனத்தவலி யாந்தூதன் காலஞ் சானே. (69)

விதாணம்—கொடை. 'தூதன் காலுக் கஞ்சான்' என்பது அருகி வழங்கும் பழமொழி. காலுக்கு—கால்வலிக்கு என்க.

உபசாரஞ் செய்பவரை விலக்கிடினு மவர்செய்கை யொழிந்து போகா
தபசாரஞ் செய்வாரை யடித்தாலும் வைதாலு மதுநில் லாது
சுபசாரத் தண்டலையார் வளநாட்டிற் றிருடருக்கத் தொழினில்லாது
விபசாரஞ் செய்வாரை மேனியெல்லாஞ் சுட்டாலும் விட்டி டாரே. (70)

'விபசாரஞ் செய்கிறவன் சுட்டாலும் விடமாட்டான்' என்பதுலகர் பழமொழி. இக்கவியின்கருத்தும் இதுவு மொன்றேயெனக் கொள்க.

சகமிக்க தண்டலையா ரடிபோற்று மகாராசர் சபையில் வந்தாற்
சுகமிக்க வேசையர்க்குப் பொன்னூறு கொடுப்பர்தமிழ் சொன்ன பேர்க்கோ
வகமிக்க சோறிடவோ ரந்தணருக் கெனினுழி யரிசியீவார்
பகடிக்கோ பணம்பத்துத் திருப்பாட்டுக் கொருகாசு பாலிப் பாரே. (71)

'பகடி—வெளிவேடக்காரன். 'பகடிக்குப் பத்துப்பணம் கொடுப்பார் திருப்பாட்டுக்கு ஒருகாசு கொடுப்பார்' என்பது பழமொழி.

பணந்தானே யறிவாகும் பணந்தானே வித்தையுமாம் பரிந்து தேடும்
பணந்தானே குணமாகும் பணமில்லா தவர்பிணமாம் பான்மை சேர்வர்
பணந்தானே பேசுவிக்குந் தண்டலைநீ ணெறியாரே பார்மீ திற்றன்
பணந்தானே பந்தியிலே குலந்தானே குப்பையிலே படுக்குந் தானே. (72)

'பணம் பந்தியிலே குலங் குப்பையிலே' என்பது பழமொழி.

புனங்காட்டு மண்ணும்விண்ணு மஞ்சவருங் காலனையும் போடா வென்றே
யினங்காட்டு மார்க்கண்டன் கடிந்துபதி னாறுவய தென்றும் பெற்றா
னனங்காட்டுந் தண்டலையா ரடியாரெல் லாமொருவர்க் கஞ்சு வாரோ
பனங்காட்டு நரிதானுஞ் சலசலப்புக் கொருநாளும் பயப்ப டாதே. (73)

இனம்-குலம். மார்க்கண்டன் என்றும் பதினாறுவயது பெற்றது:—மார்க்கண்டமுனிவர் தமக்கு ஆயுண் முடிவு தெரிந்து திருக்கடவூரிலே சுவாமியைப் பூசித்துக்கொண்டிருக்க, அப்போது இயமன்வந்து பாசமிட்டிழுக்கச் சுவாமி அவனை யுதைத்துவீழ்த்தி முனிவருக் கென்றும் பதினாறுவயதுடனிருக்க வரமருளினர். "அந்தணாளனுன்னடைக்கலம்புகுதவவனைக்காப்பதுகாரணமாக- வந்தகாலன்றன்னாருயிரதனைவௌவினாய்க்குன்றன்வண்மைகண்டடியேன்" எனச் சுந்தரமூர்த்திநாயனார்தேவாரத்திற் காண்க. "பனங்காட்டு நரிதானுஞ் சலசலப்புக்கஞ்சாது' என்பது பழமொழி.

சீரிலகுந் தண்டலையார் வளநாட்டி லொருதோழன் றீமை தீர
வாரமிகும் பிள்ளைதனை யரிந்துண்டா னொருவேந்தன் மணந்து கொண்ட
வார்வமிகு மனைக்கிழத்தி யாண்டிச்சி வடிவுகொண்டா ளாத லாலே
யூரிலொரு வன்றோழ னாருமற்ற தேதார முண்மை தானே. (74)

'ஊரிலொருவனே தோழன், ஆருமற்றதே தாரம்' என்பது பழமொழி. அற்றது-இல்லாதது. இதிலுள்ள கதைகள் வந்துழிக் காண்க.

தானவனா கியஞானச் செயலுடையார் மாதர்முலை தழுவி னாலு
மானதொழில் வகைவகையாச் செய்தாலு மனுபோக மவர்பா லுண்டோ
கானுறையுந் தண்டலையா ரடிபோற்றுஞ் சுந்தரனார் காமி போலாய்
மேனவிலுஞ் சுகம்படுக்கை மெத்தையறி யாதெனவே விளம்பி னாரே. (75)

'படுக்கைச்சுக மெத்தையறியாது' என்பது பழமொழி. இதனைச் சுந்தரர்கூறினாரெனக் கூறியிருக்கிறார். சுந்தரமூர்த்திநாயனார்தேவாரத்திலில்லை; இறந்துபோனதேவாரத்துளதுபோலும்.

சோறென்ன செய்புமெல்லாம் படைத்திடவே செய்யுமருள் சுரந்து காக்குஞ்
சோறென்ன செய்புமெல்லா மழித்திடவே செய்யுமதன் சொரூப மாக்குஞ்
சோறென்ன வெளிதேயோ தண்டலையார் தம்பூசை துலங்கச் செய்யுஞ்
சோறென்னசெய்புமெனிற்சொன்னவண்ணஞ்செயும்பழமைதோற்றுந்தானே.()

'சோறென்னசெய்பும் சொன்னவண்ணஞ்செய்யும்' என்பது பழமொழி.

எத்தருக்கு முலுத்தருக்கு மீனருக்கு மூடருக்கு மிரக்கம் பாரா
மத்தருக்குங் கொடிதாமவ் வக்குணமே நற்குணமா வாழ்ந்து போவார்
பத்தருக்கு நலங்காட்டுந் தண்டலையா ரேயறிவார் பழிப்பா ரேனும்
பித்தருக்குத் தங்குணமே நூலினுஞ்செம் மையதான பெற்றி யாமே. (77)

'பித்தருக்குத் தங்குண நூலினுஞ் செம்மை' என்பது பழமொழி. இதனைப் பெரியநாயகி கலித்துறையிலே "பித்தர்க்குத் தங்குண நூலினுஞ் செம்மை பெரியம்மையே" எனக் கூறியிருத்தல் காண்க.

பன்னகவே ணிப்பரமர் தண்டலையார் நாட்டிலுள பலருங் கேளீர்
தன்னறிவு தன்னினைவு தன்மகிமைக் கேற்றநடை தகுமே யல்லாற்
சின்னவரும் பெரியவர்போ லேநடந்தா லுள்ளதுபோஞ் சிறிய காக
மன்னநடை நடக்கப்போய்த் தன்னடையுங் கெட்டவகை யாகுந் தானே (78)

"அன்னநடை நடக்கப்போய்க் காகந் தன்னடையு மிழந்ததுபோல" என்பது பழமொழி.

போரான கவிராய ருடன்சிறிய கவிகளும்ப ரபந்தஞ் செய்வார்
வீராதி வீருடன் கோழைகளும் வாள்பிடித்து விருது சொல்வார்
பாராளுந் தண்டலைநீ ணெறியாரே யிருவகையும் பகுத்துக் காணி
லாராயு மகதேவ ராடிடத்துப் பேய்களுநின் றாடு மாறே. (79)

விருது—வெற்றி. 'மகாதேவராடுமிடத்துப் பேயு மாடுகிறது' என்பது பழமொழி. சிவபிரானுக்குப் பேயோடாடி யெனப் பெயருண்மை யாலு மறிக.

செழுங்கன் னிறைசோலைத் தண்டலைநீ ணெறியாரே திருடிக் கொண்டே
யெழுங்கள்ளர் கல்லகள்ளர் பொல்லாத கள்ளரினி யாரோ வென்றாற்
றொழுங்கள்ளர் தம்முடன்கும் பிடுங்கள்ளர் திருநீறு குழைக்குங் கள்ள
ரழுங்கள்ளர் தொழுங்கள்ள ராசாரக் கள்ளரிவ ரைவர் தாமே. (80)

கொழுமை—செழுமை. 'கும்பிடுங்கள்ளர், நீறுகுழைத்திடுங்கள்ளர், அழுங்கள்ளர், தொழுங்கள்ளர், ஆசாரக்கள்ளரே' என்பது பழமொழி.

தனத்திலே மிகுத்தசெழுந் தண்டலையார் பொன்னிவளந் தழைத்த நாட்டி
லினத்திலே மிகும்பெரியோர் வாக்குமன மொன்றாகி யெல்லாஞ் செய்வார்
சினத்திலே மிகுஞ்சிறியோர் காரியமோ சொல்வதொன்று செய்வ தொன்று
மனத்திலே பகையாகி யுதட்டிலே யுறவாகி மடிவர் தாமே. (81)

'மனத்திலே பகையு முதட்டிலே யுறவுமாயிருப்பர்' என்பது பழமொழி.

தேரோடு மணிவீதித் தண்டலையார் வளங்காணுந் தேச மெல்லாம்
போரோடும் விறல்படைத்து வீராதி வீரரென்னும் புகழே பெற்றார்
நேரோடு முலகத்தோ டொன்றுபட்டு நடப்பதுவே நீதி யாகு
மூரோட வுடனோட னாடோட நடுவோட லுணர்வு தானே. (82)

"ஊரோட வொக்கவோடல்வேண்டும்; நாடோட நடுவோடல்வேண்டும்" என்பது பழமொழி.

இழைபொருத்த முலைபாகர் தண்டலையார் வளநாட்டி லெடுத்த ராகந்
தழுதழுத்துப் பாடுவதின் மவுனமா யிருப்பதுவே தக்க தாகுங்
குழகுழத்த கல்வியினுங் கேள்வியினுங் கல்லாமை குணமே நாளும்
வழுவழுத்த வுறவுதனின் வைரம்பற் றியபகையே வண்மை யாமே. (83)

"வழுவழுத்த வுறவைக்காட்டிலும் வயிரமானபகை நல்லது"என்பதுலகர் பழமொழி.

அருப்பயிலுந் தண்டலைவாழ் சிவனடியா ரெக்குலத்தோ ரானு லென்ன
வுருப்பயிலுக் திருநீறுஞ் சாதனமுங் கண்டவுட னுகந்து போற்றி
யிருப்பதுவே முறைமையல்லா லேழையென்றுஞ் சிறியரென்று மிகழ்ந்து கூறி
னெருப்பினையே சிறிதென்று முன்றானை தனின்முடிய நினைத்த வாறே. (84)

அருப்பயிலும், அரு–கடவுள்; பயிலல்–நிகழ்தல். சாதனம் ஈண்டு உருத்திராக்கமுதலியகருவிகளெனக."நெருப்புச்சிறிதென்று முன்றானையில் முடியலாமா?" என்பது பழமொழி.

உரங்காணும் பெண்ணாசை கொடிதாகும் பெண்புத்தி யுதவா தாகுந்
திரங்காணும் பெண்வார்த்தை தீதாகும் பெண்சென்மஞ் சென்ம மாமோ
வரங்காணுந் தண்டலைநீ ணெறியாரே பெண்ணிடத்தின் மயக்கத் தாலே
யிரங்காத பேருமுண்டோ பெண்ணென்ற வுடன்பேயு மிரங்குந் தானே. (85)

"பெண்ணென்றாற் பேயுமிரங்கும்" என்பது பழமொழி.

மையிலே தோய்ந்தவிழி வஞ்சியரைச் சேர்ந்தவர்க்கு மறுமை யில்லை
மெய்யிலே பிணியுமுண்டாங் கைப்பொருளுங் கேடாகி விழல ராவார்

செய்யிலே வளர்ந்தழைத்த தண்டலையார் வளநாட்டிற் றெளிந்த தன்றோ
கையிலே புண்ணிருக்கக் கண்ணாடி பார்ப்பதென்ன கருமந் தானே. (86)

விழலர்-வீணர். "கைப்புண்ணுக்குக் கண்ணாடிவேண்டுமா?" என்பது பழமொழி.

காலமறி தண்டலையார் வளநாட்டிற் கொலைகளவு கள்ளே காமஞ்
சாலவருங் குருநிந்தை செய்பவர்பால் மேவியறந் தனைச்செய் தற்குச்
சீலமுடை யோர்வினையார் பனையடியி லேயிருந்து தெளிந்த வாவின்
பாலினையே குடித்தாலுங் கள்ளென்பார் தள்ளென்பார் பள்ளென் பாரே. (87)

பனையடியிலிருந்து பாலைக்குடித்தாலுங் கள்ளைக் குடித்தானென் பார்" என்பது பழமொழி.

கைக்கெட்டா தொருபொருளுங் கண்டவர்க்கு நகையாகுங் கனமே யில்லை
யிக்கட்டாம் வருவதெல்லாம் லாபமுண்டோ கவறுகையி லெடுக்க லாமோ
திக்கெட்டே தியகீர்த்தித் தண்டலையார் வளநாட்டிற் சீசி யென்னச்
சொக்கட்டா னெடுத்தவர்க்குச் சொக்கட்டான் சூதுபொல்லாச் சூது தானே(88)

கவறு-சூதாடுகருவிபெண்க. "சொக்கட்டான் விளையாட்டுப் பொல்லாத சூதாட்டு" என்பது பழமொழி.

தனமேவும் புற்றடிமண் குருந்தடிமண் பிரமகுண்டந் தன்னி லேய்மண்
மனமேவு மணியுடனே மந்திரமுந் தந்திரமு மருந்து மாகி
யினமேவுந் தண்டலையார் தொண்டருக்கு வந்தபிணி யெல்லாந் தீர்க்கு
மனுபோகந் தொலைந்தவுடன் சித்தியாம் வேறுமுள வவிழ்தந் தானே. (89)

பிரமம்-வேள்வி. "அனுபோகந்தொலைந்தா லவிழ்தமெல்லாம் பலிக்கும்" என்பது பழமொழி. அனுபோகம் ஈண்டு மைதுனம்.

கானமருங் கவரியொரு மயிர்படினு மிறக்குமது கழுதைக் குண்டோ
மானமுடன் வாழ்பவனே மாபுருடன் சுயோதனனை மறந்தா ருண்டோ
வானகஞ்சே ரொலிமுழங்குந் தண்டலையா ரேசொன்னே னரைக்கா சுக்குப்
போனவபி மானமினி யாயிரம்பொன் கொடுத்தாலும் பொருந்தி டாதே. (90)

முதலடியில், "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா-ருயிர்நீப்பர் மானம் வரின்" என்னுந்திருக்குறளைக் குறித்துணர்க. "அரைக்காசுக் குப்போனமானம் ஆயிரம்பொன்கொடுத்தாலும் வாராது" என்பது பழமொழி. அபி-உபசர்க்கம். சுயோதனன்-துரியோதனன். ஆனகம்-வாத்தியம்.

பொறுமையுட னறிவுடையா ரிருந்தவிடம் விளக்கேற்றிப் புகுத வேண்டுங்
கெருவமுட னகந்தையுள்ளா ரிறுமாந்து நடந்துதலை கீழா வீழ்வார்
வறுமையினு மறுமையினுங் காணலாந் தண்டலையார் வாழு நாட்டி
னிறைகுடமோ தளும்பாது குறைகுடமே கூத்தாடி நிற்ப தாமே. (91)

விளக்கேற்றிப்புகுதல்—அருமையாகத் தேடியடைதலைக் குறித்த தென்க. "நிறைகுடந்தளும்பாது குறைகுடங் கூத்தாடும்" என்பது பழமொழி.

நிலைசேரு மதிகவித ரணசுமுக துரைகளுட னேச மாகிப்
பலநாளு மேயவரை யடுத்தவர்க்குப் பலனுண்டாம் பயமு மில்லை
கலைசேருந் திங்களணி தண்டலையா ரேசொன்னேன் கண்ணிற் காண
மலைமீதி லிருப்பவரை வந்துபன்றி பாய்வதெந்த வண்ணந் தானே. (92)

"மலைமேலிருப்பவரைப் பன்றிபாய்ந்திடுமோ?" என்பது பழமொழி.

ஞாலமுறு நல்லவர்க்குச் செல்வம்வந்தா லெல்லவர்க்கு நாவ லோர்க்குங்
காலமறிந் தருமையுடன் பெருமையறிந் துதவிசெய்து கனமே செய்வார்
மாலறியாத் தண்டலைநீ ணெறியாரே யவரிடத்தே வருவார் யாரு
மாலமரம் பழுத்தவுடன் பறவையின்பாற் சீட்டெவரே யனுப்பு வாரே. (93)

'ஆலமரம் பழுத்திருக்கிறதென்று பறவைக்கார் சீட்டனுப்புகிறார்' என்பது பழமொழி.

சேணிலகு மதிச்சடையார் தண்டலையார் வளநாட்டிற் சிறந்த பூணிற்
காணவரு நாணுடையார் கனமுடையா ரல்லாதார் கரும மெல்லா
மாணவலம் பெண்ணவல மாடியகூத் தவலமென வலைந்து கேடா
நாணமில்லாக் கூத்தியர்க்கு நாலுதிக்கும் வாயிலெனு நடத்தை யாமே. (94)

"நாணமில்லாக் கூத்தியாளுக்கு நாலுதிக்கும் வாசல்' என்பது பழமொழி. கருமமெல்லாங்கேடா மெனக் கூட்டுக. "ஆணாயிருந்தாலு மவலந் தான் பெண்ணாயிருந்தாலு மவலந்தான்" என விரித்துரைக்க.

அடுத்தமனை தொறும்புகுவாள் கணவனுணு முனமுண்பா ளடக்க மில்லாள்
கடுத்தமொழி பேசிடுவாள் சிறுதனந்தே டிவளிவளைக் கலந்து வாழ்த
லெடுத்தவிடைக் கொடியாரே தண்டலையாரே யெவர்க்கு மின்ப மாமோ
குடித்தனமேகெடவேண்டிப்பிடாரிதனைப்பெண்டுவைத்துக்கொண்டதாமே. (95)

"பிடாரியைப் பெண்டுக்குவைத்ததுபோலிருக்கிறது" என்பது பழமொழி.

களித்தவருஞ் செல்வருக்கு வலிமையுண்டு மிடியருக்குக் கனந்தா னுண்டோ
விளைத்தமலை யெனுஞ்சிலையார் தண்டலைசூழ் தருமுலக வழக்கம் பாரீ
ரொளித்திடுவர் தம்மனையிற் பெண்டீரைக் கண்டவரு மொன்றும் பேசா
ரிளைத்தவன் பெண்டீரென்று மெல்லார்க்கு மைத்துனியா வியம்புவாரே. (96)

"இளைத்தவன் பெண்டாட்டி யெல்லார்க்கு மைத்துனி" என்பது பழமொழி.

நொந்தவரும் பசித்தவரும் விருந்தினரும் விரகினரு நோயுள் ளோருந்
தந்தமது வருத்தமல்லாற் பிறருடைய வருத்தமது சற்று மெண்ணா
ரிந்துலவுஞ் சடையாரே தண்டலையா ரேசொன்னே னீன்ற தாயி
னந்தமுலைக் குத்துவலி சவலைப்பிள் ளைசிறிது மறிந்தி டாதே. (97)

"முலைக்குத்துச் சவலைப்பிள்ளைக்குத் தெரியுமா?" என்பது பழமொழி.

ஆழியெல்லாம் பாலாகி யவனியெல்லா மன்னமய மாகு மென்ன
சூழவரு மிரவலர்க்குப் பசிதீர வுண்டிருக்குஞ் சுகந்தா னுண்டோ
வேழுலகும் பணியவருந் தண்டலையா ரேசொன்னே னெந்த நாளு
நாழிநெல்லுக் கொருபுடவை விற்றாலு நிருவாண நாய்க்குத் தானே. (98)

"நாழிநெல்லுக் கொருபுடவைவிற்றாலு நாய்க்கு நிர்வாணம் போகுமா?" என்பது பழமொழி.

கொச்சையிலே பாலுமுண்டோ சூத்திரர்க டம்மிடத்திற் குணந்தா னுண்டோ
துச்சரிடத் தறிவுண்டோ துச்சரெங்கே போனாலுந் துரையா வாரோ
நச்சரவத் தொடையாரே தண்டலையா ரேயிந்த நாட்டல் லாம
லச்சியிலே போனாலு மகப்பையரைக் காசதன்மே லார்கொள் வாரே. (99)

கொச்சை—வறட்டாடு. துச்சர்—கீழோர். அச்சி—ஓர்தேயம். "அச்சிக்குப்போனாலு மகப்பைபரைக்காசு" என்பது பழமொழி.

நித்தமெழு நூறான்றி செய்தாலு மொருநீதநேரே வந்தா
லத்தனையுந் தீதென்பார் பதிதருமக் கயவர்குண மகற்ற லாமோ
வித்தகஞ்சேர் தண்டலையார் வளநாட்டிற் சாம்பவிட்டு விளக்கி னாலு
மெத்தனைசெய் தாலுமென்ன பித்தளைக்குத் தன்னூற்ற மியற்கை யாமே. (100)

கயவர்—கீழோர். வித்தகம்—ஞானம். "எத்தனை விளக்கினாலும் பித்தளை தன்குண மாறாது" என்பது பழமொழி.

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

படிக்காசுப்புலவர் அருளிய

# பழமொழிவிளக்கமென்னும்

# தண்டலையார்சதகம்.

இது

திருவாவடுதுறையாதீனவித்துவானும்

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் சைவநூற்பரிசோதகருமாகிய

சே. ரா. சுப்பிரமணியக்கவிராயரெழுதிய

குறிப்புரையுடன்

மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப்பிரசுரம்—௬௫.

1921

துர்மதி(௵)

